## 2. மார்க்சியமும் இலக்கியத் திறனாய்வும்

## 2. மார்க்சியமும் இலக்கியத்திறனாய்வும்

முன்னுரை :

வரலாற்றுச் சூழலே ஒரு தத்துவத்தின் தோற்றத்திற்குக்காரணியாக அமைகிறது. தேவையின் அடிப்படையிலேயே பல தத்துவங்கள் உலகில் தோன்றின. வரலாற்றுத் தேவை முடிந்தவுடன் அத்தத்துவம் மறைந்து போதல் இயல்பானது. இவ்வடிப்படையில்தான் மார்க்சியமும் தோன்றி இன்றும் புறக்கணிக்க முடியாத ஒரு தத்துவமாக உலகம் முழுவதும் விளங்கி வருகிறது.

ஐரோப்பிய நாடுகளில் 18 ஆம் நூற்றாண்டில் தொழில் துறை தோன்றி வளர்ந்து கொண்டிருந்த போது தொழிலாளி வர்க்கம் பெருகியது. அந் நாடுகளில் மன்னராட்சி நடைபெற்றுக்கொண்டிருந்தது. குடியாட்சி உரிமைகள் மறுக்கப்பட்டன. நிலவுடைமை அமைப்பு வலுவாக இருந்தது. ஆலைகளில் உழைப்பதற்குக் கூலியுழைப்பும், பண்ட உற்பத்திக்குக் கச்சாப்பொருட்களும், பண்டங்களை விற்பதற்குச் சந்தையும் தேவைப்பட்டன. இவற்றுக்கு நிலவுடைமை அமைப்பு தடையாக இருந்தது. இத்தடையைத் தகர்த்து முன்னேற முயன்றமுதலாளி வர்க்கம், மன்னராட்சியோடு முரண்பட நேர்ந்தது. முதலாளி வர்க்கம், மன்னராட்சிக்குப் பதில் ' மக்களாட்சி ' என்ற முழக்கத்தை முன்வைத்து மக்கள் நாயகத்திற்குக் குரல் கொடுத்தது.

தொழிலாளி வர்க்கம், தன் உழைப்புச் சக்திக்கு உரிய விலை பெறுவதற்காகத் தொழிற் சங்கங்களை அமைத்துக் கொண்டது. நிலவுடைமையாளர்

களுக்கும் மன்னர்களுக்கும் எதிரான போராட்டத்தில் தொழிலாளி வர்க்கம்,முதலாளி வர்க்கத்தை ஆதரித்தது. இவ்வாறு மன்னராட்சியையும் நிலவுடைமையையும் எதிர்த்து, முதலாளி வர்க்கத்தின் தலைமையில் நடைபெற்ற முதல் புரட்சி, 1789 இல் நிகழ்ந்த பிரஞ்சுப்புரட்சி ஆகும்.

முதலாளி வர்க்கம் தன் சொந்த நலனுக்காகவே உரிமை கேட்டது. தொழிலாளி வர்க்கம் அவ்வுரிமையைக் கேட்க முற்பட்டபோதெல்லாம் முதலாளி வர்க்கம், அதனை அடக்கி ஒடுக்கியது. இதன் பின்னர் தொழிலாளி வர்க்கம் தனக்கென்று அரசியல் அமைப்புகளை உருவாக்கிக் கொள்ளத் தொடங்கியது.ஆனால் அச்சமயம் தொழிலாளி வர்க்கம், சரியான தத்துவத்தெளிவு இல்லாமல் இருந்தது. இச் சூழலில்தான் செர்மனியைச் சேர்ந்த காரல் மார்க்ஸ் (1818 - 1883 ), பிரடெரிக் எங்கெல்ஸ் ( 1820 - 1895 ) ஆகியோர், தொழிலாளி வர்க்க அரசியலுக்கு, அறிவியல் அடிப்படையிலான தத்துவத்தை உருவாக்கி அளித்தனர்.

## 1.மார்க்சியம் : விளக்கம்

மார்க்சும் எங்கெல்சும் தங்கள் காலம்வரை வளர்ச்சியடைந்திருந்த மனிதவரலாறு பற்றிய செய்திகளை எடுத்துக்கொண்டு, அவற்றைப் பகுப்பாய்வு செய்து இதுவரை அறியப்படாத மனித சமுதாய வளர்ச்சி பற்றியஅடிப்படைகளைக் கண்டறிந்தனர். இவர்களின் கண்டுபிடிப்புகளும், விளக்க உரைகளும்'மார்க்சியம்' என்று அழைக்கப்படுகின்றது. செர்மானியத் தத்துவஅறிவு, பிரஞ்சு சோசலிசக் கருத்துகள், ஆங்கிலேய அரசியல் பொருளாதாரம் ஆகியவற்றின் அடிப்படையில் மார்க்சியம் உருவானது.

மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகியோரது கருத்துகள் மட்டுமே மார்க்சியம் என்று கருதப்படுவதில்லை. மார்க்சுக்குப்பிறகு மார்க்சியத்தைச் செழுமைப்படுத்தும் நோக்கில் மார்க்சியர்களால் முன்வைக்கப்பட்ட கருத்துத்தொகுப்புகளும் சேர்த்தே மார்க்சியம் என்று குறிக்கப்படுகிறது. முக்கியமாக லெனின், ஸ்டாலின்,மாசேதுங்

ஆகியோரது கருத்துகளும் மார்க்சியத்தோடு இணைத்தே சொல்லப்படுகின்றன. மேலும் கிராம்சி, அல்தூசர், ரோசா லக்சம்பர்க் முதலிய பிற்கால மார்க்சிய ஆய்வாளர்களின் கருத்துகளும் மார்க்சியத்துள் அடக்கியே கூறப்படுகின்றன.

மார்க்சியம் உள்முரண் அற்றதன்று; தனக்குள்ளும் சில முரண்களைக் கொண்டிருக்கிறது. இந்த உள் முரண்கள்தாம் தொடர்ந்த ஆய்வுகளுக்கும் புதியவகையிலான விளக்கங்களுக்கும் காரணமாக அமைகிறது.இவற்றை யெல்லாம் உள்ளடக்கிய தொகுப்பிற்குத்தான் மார்க்சியம் என்று பெயர். தொழிலாளி வர்க்கத்திற்காக உருவாகிய மார்க்சியம் உலகப்பார்வை கொண்டது. வரலாறு, பொருளியல், மதம்,மெய்யியல், அறிவியல், சமூகம், கலை,இலக்கியம் முதலிய அனைத்தையும் விளக்கக் கூடியதாக மார்க்சியம் அமைகிறது.

மார்க்சியத்திறனாய்வு, கலைப்படைப்புகளின் பகுப்பாய்விலும் மதிப்பீட்டிலும் ஈடுபடுகிறது. அது மார்க்சிய அறிவியலில் புறவயக் கோட்பாடு-களிலிருந்தே தொடங்குகிறது. எனவே மார்க்சியத்தத்துவத்தின் அடிப்படைகளை இங்குச் சுருக்கமாகக் காணவேண்டியுள்ளது.

19 ஆம் நூற்றாண்டின் நடுவில் தோன்றிய மார்க்சியம், சீர்க்காணும் மூன்று அடிப்படைகளைக் கொண்டது ஆகும்.

1. அ) இயங்கியல் பொருள் முதல்வாதம்.
   ஆ) வரலாற்றுப் பொருள் முதல்வாதம்.
2. அரசியல் பொருளாதாரம்.
3. விஞ்ஞான சோசலிசம்.[1]

1. அ) இயங்கியல் பொருள் முதல்வாதம்:

எகல் ( 1770 - 1831 ) என்ற செர்மன் தத்துவ வாதியின் இயங்கியல் ( Dialectics ) என்னும் தத்துவத்தையும், ஃபயர்பாக் என்ற

தத்துவவாதியின் பொருள் முதல்வாதம் ( Meterialism ) என்னும் தத்துவத்தை-யும் இணைத்து, இயங்கியல் பொருள் முதல்வாதம் (Dialectical materialism) என்னும் புதிய தத்துவத்தை மார்க்ஸ் உருவாக்கினார்.

இயற்கை, சமூகம், சிந்தனை ஆகியவற்றின் பொதுவான வளர்ச்சி விதிகளைப் பற்றிய அறிவியலைத் ' தத்துவம் ' எனலாம். தத்துவம் தொன்மைக் காலம் முதல் இன்றுவரை இரு பிரிவுகளாக நிற்கிறது.

அவை : 1. கருத்துமுதல்வாதம். 2. பொருள்முதல்வாதம்.

புறஉலகு அகநிலைக்குரியது; மாந்தரின் மனத்திற்குள்ளாக மட்டுமே அமைவது; மனத்தினால் படைக்கப்பெறுவது; உண்மையல்லாதது; மனத்தில் எழுகின்ற வெற்று மயக்கம்; ஆகவே, கருத்துத்தான் முதன்மையானது; பொருள் அக்கருத்தினால் படைக்கப்பெறுகின்ற வெற்றுத் தோற்றமேயாகும்; எனவே பொருள் இரண்டாம் நிலைக்குரியது எனக் கூறுவது கருத்துமுதல்வாதம்[2] (Idealism) எனப்படும்.

புற உலகு, புறநிலைக்குரியது; உண்மையானது; பொருண்மையானது; மாந்தரின் சிந்தனைக்கு வெளியே இருப்பது; பொருளினாலேயே அப்பொருளைப் பற்றிய கருத்துப்பிறக்கின்றது; ஆகவே, பொருள் முதன்மையானது; கருத்து இரண்டாம் நிலைக்குரியது எனக்கூறுவது பொருள்முதல்வாதம்[3] ( Meterialism) என்று குறிப்பிடப்படுகிறது.

பொருளின் இயக்கத்தை வலியுறுத்துவதும், அது ஏன் இயங்குகிறது என்பதையும், எப்படி இயங்குகிறது என்பதையும் விளக்கியுரைப்பது இயங்கியல் எனப்படும்.

' Dialectics ' ( இயங்கியல் ) என்னும் ஆங்கிலச்சொல், ' Dialektikos ' என்னும் கிரேக்க மொழிச் சொல்லிலிருந்து உருவானதாகும். ' விவாதம் ' அல்லது ' தருக்கம் ' என்பது இதன் பொருள் ஆகும்.[4] பண்டைக்

காலத்தில் இயங்கியல் என்பது, தருக்கம் மூலம் உண்மையை வெளிப்படுத்தல் ஆகும். ' Dialectics ' என்று பெயரிட்டவர் ' எகல் ' ஆவார்.

இயங்கியலைப் பொறுத்தவரை மூன்று விதிகள் மிகவும்முக்கியமானவை.

1. எதிர்க்கூறுகளின் ஐக்கியமும் போராட்டமும்.

2. அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாக மாற்றம் அடைதல்.

3. நிலை மறுப்பின் நிலை மறுப்பு.[5]

## 1. எதிர்க்கூறுகளின் ஐக்கியமும் போராட்டமும் :

உலகில் காணப்படும் எல்லா நிகழ்வுகளும் எதிர்க்கூறுகளால் ஆனவை. ஒரு காந்தத்தில் வடதுருவம் இல்லாமல் தென்துருவம் இருக்க முடியாது; தென்துருவம் இல்லாமல் வடதுருவம் இருக்கமுடியாது என்ற அர்த்தத்தில் இவ்விரு துருவங்களும் ஐக்கியப்பட்டுள்ளன. இதுவே எதிர்க்கூறுகளின் ஐக்கியம் எனப்படும். இந்தஅர்த்தத்தில் ஐக்கியப்பட்டிருந்தாலும் வடதுருவமும் தென்துருவமும் ஒன்றல்ல. அவை வெவ்வேறானவை; ஒன்றுக்கொன்று முரணானவை. இது எதிர்க்கூறுகளின் போராட்டம் எனப்படுகிறது.

" அர்த்தநாரீஸ்வரனைப்படைத்து, அமுதமும் நஞ்சும் ஒன்றே என்று கூறிய நம் முன்னோருக்கு இவ்வியங்கியல் கருத்து அன்னியமானதும் அல்ல; அறிய முடியாததுமல்ல "[6] என்று தமிழ்நாட்டு மார்க்சியர் கூறுவர்.

## 2. அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாக மாற்றம் அடைதல் :

தண்ணீர் வெந்நீர் ஆவது, அளவு மாற்றத்தையும் அது கொதிநிலை அடைந்து ஆவியாக மாறுவது, பண்பு மாற்றத்தையும் குறிக்கும். சமுதாயத்தில் சீர்திருத்தங்கள் அளவு மாற்றங்களையும், புரட்சிகள் பண்பு மாற்றங்களையும் குறிக்கின்றன.

' அடிமேல் அடி வைத்தால் அம்மியும் நகரும் ', எறும்பு ஊரக் கல்லும் தேயும் ', ' சிறுதுளி பெருவெள்ளம் ' முதலிய கருத்துகள் இவ்வியங்கியல்

கருத்தைத்தான் சுட்டுகின்றன [7] என்பாரும் உளர்.

3. நிலைமறுப்பின் நிலை மறுப்பு :

பழையன கழிவதும் புதியன புகுவதுமான விதி ஓயாமல் இயங்கிக் கொண்டிருப்பதையே நிலைமறுப்பின் நிலைமறுப்பு என்பர். மொட்டை மறுத்துப் பூவும், பூவை மறுத்துக்காயும் உருவாவதை நிலைமறுப்பின் நிலைமறுப்புக்குச் சான்றாகக் குறிப்பிடலாம்.

இவ்வியங்கியல் கருத்துக்கும், " தன் வினை தன்னைச் சுடும் ', வளர்த்தகடா மார்பில் பாயும் ' என்னும் பழமொழிகளின் கருத்திற்கும் முரண்பாடு எதுவும் இல்லை " [8] என்று மார்க்சியர் குறிப்பிடுவர்.

" இயங்கியல் பொருள் முதலியல், அனைத்தும் தழுவியதொரு மெய்யியல் கோட்பாடாகும் " [9] என்று மார்க்சியர் கூறுவர். ஆனால் " இயங்கியல் என்பது மெய்காண்முறை - அறிவுத்தோற்றவியல் ( Epistemology ) என்பதே அன்றி, மெய்யியல் ஆகாது " [10] என்று இக்கருத்தை மறுக்கும் மார்க்சியரும் உளர்.

பொருள்களின் இயக்கத்தையும், சமூகத்தின் இயக்கப் போக்கையும் புரிந்துகொள்ளப்பெரிதும் துணை புரியும் மார்க்சியத் தத்துவம் இயங்கியல்பொருள் முதல்வாதம் ஆகும். இத்தகைய, " இயங்கியல் பொருள் முதல்வாதம் இன்னும் முழுமையாக்கப்படவில்லை ; செழுமையாக்கப்படவில்லை; லெனின் கூறியது போல், அதற்கான அஸ்திவாரம் மட்டுமே இடப்பட்டுள்ளது " [11] என்னும் கருத்து, சில ஆய்வாளர்களிடம் உண்டு.

வரலாற்றுப்பொருள் முதல் வாதம் :

இயங்கியல் பொருள்முதல்வாதத்தை மனித சமுதாயத்தின் வளர்ச்சிக்குப் பொருத்தி ஆய்வதுதான் வரலாற்றுப் பொருள் முதல்வாதம் ( Historical Meterialism ) எனப்படும்.

உயிரியல் வளர்ச்சியின் விதிகளை டார்வின் கண்டு உரைத்தது போல மனித வரலாற்றின் வளர்ச்சி விதிகளை மார்க்ஸ் கண்டறிந்தார். உற்பத்தி முறையே ஒவ்வொரு கட்டத்தின் சமூக அமைப்பைத் தீர்மானிக்கிறது என்கிறது மார்க்சியம். உற்பத்தி முறை மாறும்பொழுதெல்லாம் சமூகக் கட்டமைப்பும் மாறுகிறது. இவ்வாறு மனித சமூகம் ஐந்து முக்கியமான சமூகப்பொருண்மை ( Meterialistic ) அமைப்புகளை உடையது என்று மார்க்சிய மூலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். அவை :

1. தொல்பொதுவுடைமைச் சமுதாயம் ( Primitive communism)
2. அடிமையுடைமைச் சமுதாயம் ( Slave - Owning)
3. நிலவுடைமைச் சமுதாயம் ( Feudal )
4. முதலாளியச் சமுதாயம் ( Capitalistic )
5. பொதுவுடைமைச் சமுதாயம் ( Communism)[12]

மனித சமூகம் உள் முரண்பாடுகளைக் கொண்டது. முரண்பாடுகளைத் தீர்த்துக்கொள்ளத் தொடர்ந்து போராட்டம் நிகழ்கிறது. மீண்டும் புதிய முரண்பாடுகள் தோன்றுகின்றன; போராட்டம் தொடர்கிறது. இவ்வாறு முரண்பாடுகளும் போராட்டங்களும் நிகழும் போக்கில் மனித சமூகம் வளர்ந்து செல்கிறது என்று மார்க்சியம் கருதுகிறது. எனவே தான், " மனித குல வரலாறு அனைத்தும் வர்க்கப் போராட்டங்களது, சுரண்டும் வர்க்கங்களுக்கும் சுரண்டப்படும் வர்க்கங்களுக்கும் - ஆளும் வர்க்கங்களுக்கும் ஆளப்படும் வர்க்கங்களுக்கும் இடையிலான போராட்டங்களது வரலாறேயாகும் "[13] என்று பொதுவுடைமைக் கட்சி அறிக்கை குறிப்பிடுகிறது.

மேற்குறித்த ஐந்து சமூகப்பொருளியல் அமைப்புகளைத் தவிர வேறு அமைப்புகள் இல்லை என்று கருதுதல் ஆகாது. உலகம் முழுவதும் எல்லா நாடுகளிலும் ஒரேபடிநிலைகளில்தான் சமூக வளர்ச்சி அமைந்திருக்கும் என்று கூறுவது பொருத்தமாகாது. வேறு சில இடைநிலை அல்லது மாறுநிலை வடிவங்களும் இருத்தல் கூடும்.

ஐரோப்பாவில் உற்பத்திச் சக்திகளுடைய வளர்ச்சியின் விளைவாகப்

பண்டைய பொதுவுடைமை அழிந்தபோது, தனியுடைமை அடிப்படையில் அடிமைமுறை எழுந்து, அது வழக்கொழிந்த பின்னர் நிலவுடைமை அமைந்தது; அல்லது பண்டைய பொதுவுடைமையிலிருந்து நேராக நிலவுடைமை அமைப்பு உண்டாயிற்று. இந்தியா முதலிய நாடுகள் இந்த வழியினைத் தழுவவில்லை. பண்டைய பொது-வுடைமையின் சிதைவில் இந்நாடுகளில் எழுந்த சமுதாய ஏற்பாட்டை ஆசிய உற்பத்திமுறை [14] என்பர். எனவே ஐரோப்பியச் சூழலில் மார்க்ஸ் கண்டறிந்த அடிமைச் சமூகம், நிலவுடைமைச் சமூகம் முதலிய கருத்தாக்கங்களை அப்படியே இந்தியச் சூழலுக்குப் பொருத்த இயலாது.

வரலாற்றுப்பொருள்முதல்வாதத்தின் அடிப்படைகளைக் கீழ்வருமாறு தொகுத்துக் கூறுவர் :

1. சமூக வாழ்நிலையே - இருத்தலே மனிதரின் உணர்வைத் தீர்மானிக்கிறது. மனிதரின் உணர்வு, சமூக வாழ்நிலையைத் தீர்மானிப்பதில்லை.
2. உற்பத்தி முறையே மனிதரின் உணர்வைத் தீர்மானிக்கிறது. அரசு, கருத்தியல், மதம் ஆகியன உற்பத்தி முறையால் தீர்மானிக்கப்படுகின்றன.
3. குறிப்பிட்ட சமுதாய வளர்ச்சிக்கட்டத்தில் உற்பத்தி உறவுகள், உற்பத்திச் சக்திகளுடன் மோதுகின்றன. உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சிக்கு உற்பத்தி உறவுகள் தளை ஆகின்றன. இதன் விளைவாக சமுதாயப்புரட்சி ஏற்படுகிறது. புரட்சி, உற்பத்தி உறவுகளை மாற்றுகிறது. அதனோடு சேர்ந்து அரசு, பண்பாடு முதலியனவும் மாறுகின்றன. [15]

உலகக் கண்ணோட்டம் பற்றிய பொதுவான சிக்கல்களை 'இயங்கியல் பொருள் முதல்வாதம்' விளக்குகிறது. சமூக முன்னேற்றத்தின் உந்து சக்திகள், பொதுவிதிகள் ஆகியனவற்றை வரலாற்றியல் பொருள்முதல்வாதம் தெளிவுபடுத்துகிறது.

## ஆ. அரசியல் பொருளாதாரம் :

மார்க்சிய அரசியல் பொருளாதாரம், மனித சமுதாயவளர்ச்சியின் பல்வேறு கட்டங்களிலும் பிழைப்புக்கு வேண்டிய பொருளியல் சாதனங்களது உற்பத்தி-

யையும் பங்கீட்டையும்கட்டுப்படுத்தும் விதிகளை ஆராய்கிறது. ' பொருள் உற்பத்தியில் சமூகக் கட்டமைப்பு ' ( Social Structure of Production ) என்பது அரசியல் பொருளாதாரத்தின் மைய ஆய்வுப் பொருளாகும்.

## இ. விஞ்ஞான சோசலிசம் :

விஞ்ஞான சோசலிசம் என்பது பாட்டாளி வர்க்கத்தின் வர்க்கப் போராட்டம், சோசலிசப்புரட்சி ஆகியவற்றின் தத்துவம் ஆகும்.

தொடக்ககால சோசலிசம் கற்பனா சோசலிசமாகவே இருந்தது. கற்பனா சோசலிசத்தால் முதலாளியம் ஒழிவதற்கு வழி சொல்ல முடியவில்லை. எந்தச்சமூகச் சக்தியால் புதிய சமுதாயத்தைப்படைக்க முடியும் என்பதைச் சுட்டிக் காட்ட முடியவில்லை. வர்க்கப்போராட்டம்தான் சமுதாய வளர்ச்சியின் அடிப்படையான உந்துசக்தி என்னும் முடிவை மார்க்சும் எங்கெல்சும் புலப்படுத்தினார்கள்.

தொழிலாளி வர்க்கத்துக்கும் முதலாளி வர்க்கத்துக்கும் இடையிலான வர்க்கப்போராட்டம் முற்றி சோசலிசப் புரட்சியாக வடிவெடுக்கிறது. சமுதாயத்தின் உற்பத்திச் சக்திகள் வளர்ச்சியடைந்து மென்மேலும் முதலாளிய உற்பத்தி உறவுகளுடன் மோதிக்கொள்கின்றன. இம் முரண்பாட்டுக்கு சோசலிசப்புரட்சி தவிர வேறு தீர்வு இல்லை என்று மார்க்சியம் வரையறுக்கிறது.

## 2. மார்க்சிய இலக்கியக் கோட்பாடுகள் :

அடித்தள மேற்கட்டுமான உறவு, பிரதிபலிப்புக் கோட்பாடு, சோசலிச எதார்த்தவாதம் ஆகிய மூன்று கருத்தாக்கங்களை அடிப்படையாகக் கொண்டு, மார்க்சிய இலக்கியக் கொள்கை இயங்கி வருகிறது. எனவே இம்மூன்றனையும் இங்கு விளக்குவது தேவை ஆகிறது.

அ. அடிக்கட்டுமானம், மேற்கட்டுமானம் :

இது இயங்கியல் பொருள்முதல்வாதக் கோட்பாட்டினுள் அடங்கியுள்ள கருத்தாக்கம் ஆகும்.

" மார்க்சிய இலக்கியக் கொள்கையை உருவாக்குவதற்கு அடித்-தளத்திற்கும் மேற்தளத்திற்கும் இடையேயான உறவு பற்றிய சரியான அறிவு அவசியமாகும். இந்த இடத்தில் தான் மார்க்சிய அழகியற்கொள்கைக்கும் மற்ற கொள்கைகட்கும் இடையே எவ்விதமான வேறுபாடுகள் உள்ளன அல்லது சமுதாயத்தில் இலக்கியத்தின் இடத்தைப்பற்றிய உண்மையான மார்க்சிய நிலையின் தனிப்பண்புகள் யாவை என்பன போன்ற கேள்விகளுக்கான பதிலை நாம் தேட வேண்டும் " [16] என்பர் மார்க்சிய அறிஞர்.

' அரசியல் பொருளாதார விமர்சனத்துக்கு ஒரு பங்களிப்பு ' என்னும் தன் நூலின் முன்னுரையில் மார்க்ஸ் குறிப்பிடும் ஒரு பகுதியை, மார்க்சியர்கள் அடிக்கட்டுமானம், மேற்கட்டுமானம் என்னும் கருத்தை விளக்குவதற்கு அடிப்படையாகக் கொள்வர்.

" உற்பத்தி உறவுகளின் ஒட்டுமொத்தமே சமூகத்தின் பொருளாதார அமைப்பாகும். இதுதான் உண்மையான அடித்தளம் ( Basic Structure ) இதன்மேல் சமூக உணர்வுவடிவங்களான சட்டம் மற்றும் அரசியல் மேற்கட்டுமானங்கள் (Super structure ) எழுகின்றன. பொருளாதார வாழ்வின் உற்பத்தி முறையே பொதுவான வாழ்வின் சமூக அரசியல் மற்றும் சிந்தனைப் போக்கைத் தீர்மானிக்கிறது.. சமூக அடிப்படை மாறும்போது மேற்கட்டுமானம் முழுவதும் ஒரு வகையில், வேகத்தில் மாறுகின்றது " [17] என்பது மார்க்சின் கூற்று.

அடித்தளம் என்பது ஒரு குறிப்பிட்ட காலத்திய சமூக உற்பத்தி முறையாகும். இதைப்பொருளியல் நிலைமை என்பர். மேற்கட்டுமானம் என்பது ஒரு குறிப்பிட்ட காலத்திய சமூகத்தின் அரசியல், சட்டம், நீதி, சமயம், தத்துவம்,

கலை இலக்கியங்கள் ஆகியவை குறித்த கருத்துகளும் நிறுவனங்களும் ஆகும். இதைக் கருத்தியல் நிலைமை என்பர்.

அடிக்கட்டுமானம்தான் மேற்கட்டுமானத்தைத் தீர்மானிக்கிறது என்னும் கோட்பாடு மார்க்சியத்தில் முக்கியமானது. இது மார்க்சியக் கலை இலக்கியக் கோட்பாட்டின் அடிப்படை ஆகும். ஆனால் இக்கோட்பாடு, எந்திரவியல் அடிப்படையில் மார்க்ஸ், எங்கெல்ஸ் காலத்திலேயே சில மார்க்சியர்-களால் புரிந்து கொள்ளப்பட்டது.

தமிழிலும் சில மார்க்சியரிடம் இப்போக்கு வெளிப்பட்டுள்ளது. " இன்றைய வர்க்க சமுதாயத்திற்குச் சேவை செய்வதற்காகவே அரசு, சட்டங்கள் மதம், சாதிப்பாகுபாடு, கல்வி, கலை இலக்கியங்கள் என்ற மேல்மட்ட அமைப்புகள் ஏற்பட்டன. வர்க்க சமுதாயம் உடைத் தெறியப்படும்போது இம்-மேல்மட்ட அமைப்புகளும்தகர்க்கப்படும் " [18] என்னும் கூற்று எந்தரவியல் புரிதலுக்குச் சான்று ஆகும்.

எங்கெல்ஸ் தன் காலத்திலேயே அடிக்கட்டுமானத்திற்கும் மேற்கட்டு-மானத்திற்கும் உள்ள உறவை ஒற்றைப்பரிமாணத்தில் சிலர் புரிந்து கொண்ட அவலத்தைக்கண்ணுற்றார். எனவே பிளாக்குக்கு அவர் எழுதிய கடிதத்தில் இப்போக்கை விமர்சனம் செய்து எழுதியுள்ளார்.

" சரித்திரத்தின் பொருள் முதல்வாதக்கருத்தின்படி, சரித்திரத்திலே இறுதியான நிர்ணயிக்கும் அம்சம் யதார்த்த வாழ்க்கையின் உற்பத்தியும், பெருக்கமும் தான். இதற்குமேல் நானோ அல்லது மார்க்சோ என்றும் உறுதி கூறியதில்லை. எனவே, பொருளாதார அம்சம் மட்டுமே நிர்ணயிக்கும் அம்சமென எவரேனும் இதனைத் திரித்துக் கூறவாரேயானால், அவர் அந்தச் சித்தாந்தத்தையே ஒரு அர்த்தமற்ற அபத்தமான சொல்லாட்சியாக மாற்றி விடுகிறார். " [19]
என்று எங்கெல்ஸ் எழுதியுள்ளார்.

அடித்தளந்தான் மேற்கட்டுமானத்தை இறுதியாகத் தீர்மானிக்கும் என்று தொடக்கமிட்டவர் மார்க்ஸ். மேற்கட்டுமானம் அடித்தளத்தின் மீது செல்வாக்கைப் பதிக்கும் என்று சொல்லத் தொடங்கியவர் எங்கெல்ஸ் எனலாம்.

அடித்தளத்திற்கும் மேற்கட்டுமானத்திற்குமிடையேஉள்ள தொடர்புகளை மார்க்சும் எங்கெல்சும் சுட்டிக்காட்டியிருந்த பொழுதிலும், அவர்கள் கலைக்கும் பொருளாதார அமைப்பிற்கும் இடையே உள்ள உறவினைத் திட்டவட்டமாகவோ அல்லது ஒழுங்காகவோ வரையறுக்க முனையவில்லை [20] என்பாரும் உளர்.

சமுதாய அமைப்பின் அடித்தளம் என்று பொருளாதார அமைப்பைக் கணிக்கும் மார்க்சின் விளக்கம் தெளிவாக இல்லை; பொருளாதார அடித்தளம் என்பதில் எவற்றைச் சேர்த்துக்கொள்ள வேண்டும், எவற்றை ஒதுக்க வேண்டும் என்பது தெளிவாக்கப்படவில்லை; பொருளாதார அடித்தளமானது எவ்விதம் மேற்கட்டுமானத்தை நிர்ணயிக்கிறது என்பதும் சரியாக விளக்கப்படவில்லை; அடித்தளமல்லாத எல்லாவற்றையும் மேற்கட்டுமானமாகக் கொள்கிறார் மார்க்ஸ் [21] என்று அமெரிக்கச் சமூகவியல் விஞ்ஞானி ரைட்மில்ஸ் கருத்துரைத்துள்ளார்.

அடித்தளம், மேற்கட்டு உறவில் எது முதன்மையானது என்ற கேள்வி எங்கெல்ஸ் காலம் முதல் அழுத்தமாகக் கேட்கப்படுகிறது. அடித்தளம் தான் என்று கூறப்படும் கருத்து, வறட்டுக்கோட்பாடு, [22] வைதீக மார்க்சியம் ( Orthodox Marxism [23] ) கொச்சைப்படுத்தப்பட்ட மார்க்சியம் ( Vulgar Marxism ) [24] என விமர்சனம் செய்யப்பட்டுள்ளது.

சீன மார்க்சியரான மாவோ, " சில நிலைமைகளில் உற்பத்தி உறவுகள், சித்தாந்தம், மேற்கட்டுமானம் ஆகியன தங்கள் தரப்பில் பிரதானமான, நிர்ணயகரமான பங்கை ஆற்றுகின்றன என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்", [25] என்பார்.

அடித்தளம், மேற்கட்டு ஆகியவற்றை மார்க்ஸ் விளக்கும் பொழுது கட்டடக்கலைச் சொற்களைப் பயன் படுத்தியிருக்கிறார். இவை ஒவ்வொன்றிலும்

பற்பல பகுதிகள் இருக்கின்றன. இவை அனைத்தும் இயக்கத்திலும் இருக்கின்றன. எந்நேரமும் இயக்கத்தில் இருக்கும் ஒன்றை இயங்காததாகிய கட்டிடக்கலைச்சொல் விளக்க இயலாது [26] என்று அவர் கருதுகின்றார்.

எனவே அடித்தளத்திற்கும் மேற்கட்டுமானத்திற்கும் இடையே உள்ள தொடர்புகளை வரையறுப்பது அவ்வளவு எளிதன்று எனத் தோன்றுகிறது. அடிக்கட்டுமானம் எவ்வாறு மேற்கட்டுமானத்தைப்பாதிக்கின்றதோ அதேபோன்று மேற்கட்டுமானமும் அடித்தளத்தைப்பாதிக்கின்றது. ஆதலால் பொருளாதார அடிப்படைகளுக்கும், கலை இலக்கியம் போன்றவற்றிற்கும் இடையே உள்ள தொடர்புகள் சிக்கலானவை என்று வரையறுக்கலாம்.

ஆ. பிரதிபலித்தல் கோட்பாடு :

அறிவுத் தோற்றம் குறித்த மார்க்சியத் தத்துவத்தின் அடிப்படையில் லெனினால் வளர்த்தெடுக்கப்பட்ட இ[illegible]யக் கோட்பாடு, பிரதிபலித்தல் கோட்பாடு ஆகும்.

வாழ்நிலைதான் சிந்தனையை – உணர்வைத் தீர்மானிக்கிறது என்பது மார்க்சிய விதி. இந்த அடிப்படையில் சமூகத்தில் நிலவும் வர்க்கமுரண்பாடுகள் மற்றும் போராட்டங்களை, கலை இலக்கியம் சிந்திக்கவேண்டும். இது பிரதிபலிப்புக் கோட்பாடு எனக்கருதப்படுகிறது. கலை இலக்கியப்படைப்பாளிகள் உடைமைச் சமூகத்தில் ஆளும் வர்க்கத்தின் கருத்தியலைப்பிரதிபலிக்கின்றனர். முதலாளியச் சமூகத்தை, மாற்றி அமைக்கும் நோக்கில் மார்க்சியர் செயல்பட முனையும் பொழுது சமூக மாற்றத்தை மற்றும் போராட்டத்தைச் சித்தரிக்கும் நோக்கில் கலை இலக்கியங்களைப்படைக்க வேண்டும் என்று மார்க்சியர் கருதுகின்றனர்.

பிரதிபலிப்பு என்பது இருவகைப்படும். 1. இருப்பதை அப்படியே பிரதிபலித்தல் ( Passive Reflection ) 2. இருப்பதற்கு எதிர்வினை தருதல் ( Active Reflection ). இவ்வாறு பிரதிபலிப்பு என்பதை

இருவகைப்பொருள்களையும் உள்ளடக்கி லெனின் குறிப்பிட்டுள்ளார்.[27]

இந்த அடிப்படையில் முதலாளியச் சமூகத்திலுள் அதற்கு எதிர்-நிலையைக் கலை இலக்கியப்படைப்பாளிகள் எடுப்பதைப்புரிந்து கொள்ள முடியும். எந்த ஒரு சமூகச் சூழலுக்கும் கலைஞர்கள் எதிர்வினையைத்தர முடியும் என்ற முறையிலும் இவர்கள் கருதுகின்றனர். இக்கருத்தை உட்கொண்டு மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகியவர்கள் பால்சாக் பற்றிக் கூறியதையும், லெனின், டால்ஸ்டாய் பற்றிக் கூறியதையும் இவர்கள் ஆதாரம் காட்டுகின்றனர்.[28]

பால்சாக் பிரஞ்சுச் சமூகத்தில் மன்னரை ஆதரித்தவர். ஆனால் அவருடைய படைப்புகளில் முதலாளியச் சமூக வாழ்க்கையைக் கடுமையான விமர்சனத்திற்கு உள்ளாக்கினார். அவர் வெளிப்படையாக ஒத்துக் கொண்ட கருத்தியலுக்கு, இலக்கியத்திலுள் எதிர்நிலை எடுக்கின்றார்.

அதேபோல் டால்ஸ்டாய் நிலவுடைமைக் கருத்தோட்டம் கொண்டவர். ஆனால் நிலவுடைமையின் சீரழிவைத் தன் படைப்பில் சித்திரிக்கின்றார். இதை லெனின் விளக்கியுள்ளார்.[29]

ஓர் இலக்கியவாதி, தான் வெளிப்படையாக ஒப்புக்கொள்ளும் கருத்தியலுக்கு எதிராகத் தன் கலைப்படைப்பினுள் இயங்க முடியும் என்பதை மார்க்சியர் விளக்கியுள்ளனர்.

## இ. சோசலிச நடப்பியல் :

மார்க்சியக் கொள்கையின் அடிப்படையில், பொதுவாக இலக்கியம் என்பது மேற்கட்டுமானத்தின் ஒரு பகுதி. அடித்தளம் மாறும்பொழுது மேற்கட்டு-மானம் மாறும். ஆகவே இலக்கியத்தின் உருவமும் உள்ளடக்கமும் மாறும். இலக்கியம் என்பது ஒவ்வொரு குறிப்பிட்ட சமூக அமைப்பிலும் ஆளும் வர்க்கத்தின் கருத்தியலைச் சார்ந்ததாகவே இருக்க முடியும். இலக்கியவாதிகள் ஆளும் வர்க்கத்தின் கருத்தியலைப் பிரதிபலிப்பவர்கள், ஏற்றுக்கொள்பவர்கள்.

இம்முறையில் இலக்கியம் என்பது ஆளும் வர்க்கத்தின் கருத்தியலையே சார்ந்ததாக இருக்க முடியும். முதலாளியச் சமுதாயத்தைத் தூக்கி எறியும் நோக்கில் பாட்டாளி வர்க்கம் தனக்கான கலை இலக்கியத்தைப் படைத்துக்கொள்ள வேண்டும். இம்முறையிலும் பாட்டாளி வர்க்கத்தின் அரசியலைக் கலை இலக்கியம் வெளிப்படுத்த வேண்டும். சமூக மாற்றத்திற்குத்துணை செய்வதாகவே கலை இலக்கியம் அமைய முடியும். இந்த அடிப்படையில் முதலாளியச் சமூகத்தைத் தூக்கி எறியும் நோக்கில் சோசலிச நடப்பியல் ( Socialist Realism ) என்னும் கோட்பாடு மார்க்சியரால் முன் வைக்கப்படுகிறது.

மார்க்சிய இலக்கியக் கொள்கையை விளக்க முற்படும் பொழுது நடப்பியல் ( Realism ) என்பதனையும் விளக்கவேண்டும். மார்க்சியர்களுக்கு முன்பே நடப்பியல் உண்டு. ஆனால் அது இயற்பண்புவாதம் ( Naturalism ) எனக்குறிப்பிடப்படுகிறது. உள்ளதை அவ்வாறே சொல்வது இயற்பண்புவாதம் ஆகும். ஏழைகள், பரத்தையர் ஆகியோரின் வாழ்க்கை இவ்வகையில் படைக்கப் பட்டது. பால் சாக் ( Balzac ) ஜோலா ( Zola ) ஆகியோரது படைப்புகள் இத்தகையன.

அடுத்து, விமர்சன நடப்பியல் ( Critical Realism ) வந்தது. இது முதலாளியச் சூழலை விமர்சனம் செய்வது. முதலாளி, தொழிலாளி ஆகியோருக்கிடையில் உள்ள முரண்களை வெளிப்படுத்தியது. இதன் தொடர்ச்சியாகப் பாட்டாளிவர்க்க அடிப்படையில் மார்க்சிய நடப்பியல் என்பது தோன்றியது.

பாட்டாளி வர்க்க அடிப்படையில், சமூகத்தை வர்க்கப் போராட்டமாகப் பார்த்தல்; பாட்டாளி வர்க்கத்தைச் சார்ந்தவர்கள் தலைவர்கள்; வர்க்கப் போராட்டத்தை முன்னின்று நடத்தக் கூடியவர்கள் பாட்டாளி வர்க்கத்தினர் - பாட்டாளி வர்க்கத்தின் சார்பினரான கட்சியினர் ; உழவர்கள், உதிரிப் பாட்டாளிகள் ஆகியோர் வர்க்கப் படிவங்கள் (Stata ). மத்திய தர வர்க்கம், படிப்பாளிகள் ஆகியோர் குட்டி முதலாளிகள். இவர்கள்

முதலாளியச் சார்புடையவர்கள்; முதலாளியச் சமூகச் சூழலில் கட்சியின் தலைமையில் பாட்டாளி வர்க்கம் திரண்டு முதலாளியத்தைத் தூக்கி எறியவேண்டும்; இந்த அரசியலுக்குக் கலை இலக்கியம் உதவியாக இருக்க வேண்டும் என்பன போன்ற கருத்துகளை, மார்க்சிய நடப்பியல் உட்கொண்டு இருந்தது.

எங்கெல்சின் வகை மாதிரிப் பாத்திரங்கள் ( Typical Charecters ) என்னும் கோட்பாடு இந்நடப்பியல் வாதத்தின் அடிப்படையைப் புலப்படுத்துவதே ஆகும். முதலாளி, தொழிலாளி என்போர் எதிர்வர்க்கங்களின் வகை மாதிரிப் பாத்திரங்கள். பாட்டாளி வர்க்கப் பாத்திரம் என்பது போராட்டத்தை முன் எடுத்துச் செல்ல வேண்டும்; குறிக்கோள் பாத்திரமாக அமைய வேண்டும்; தனக்குள் சிதைவை அனுமதிக்காது; உளவியல்சிக்கல்களுக்குள் மாட்டிக் கொள்ளாது.

இக் கோட்பாட்டில் அரசியல் முதன்மை இடம் பெறுகிறது ஆகவே கட்சிக்கும் கட்சித்தலைமைக்கும் முதன்மை வாய்க்கிறது.இதிலிருந்துதான் சோசலிச நடப்பியல் உருவாகிறது. சோவியத் ஒன்றியத்தில் கட்சிக்குள்ளும் வெளியிலும் பல்வேறு கலை இலக்கியப்போக்குகள் நிலவின. அவை செல்வாக்குப்பெற முடியாவண்ணம், சோசலிச நடப்பியல் மட்டுமே பாட்டாளி வர்க்கத்தின் கலை இலக்கியக் கோட்பாடு என்று நிறுவினர்.

கலை இலக்கியங்களைப் படைப்பதற்கும், திறனாய்வு செய்வதற்கும் சோசலிச நடப்பியலை மார்க்சியர் கையாள்கின்றனர். " மனிதன் இன்று எப்படி இருக்கிறான் என்பதை மட்டும் அல்ல; நாளை எப்படி இருப்பான்; இருக்கவேண்டும் என்பதையும் சித்திரிக்க வேண்டும் " [30] இவ்வாறு சித்திரிப்பது சோசலிச நடப்பியல் ஆகும்.

மேலும், " கலை, எதார்த்தத்தை மறுபடைப்புச் செய்தாலும், விளக்கினாலும் மட்டும் போதாது; அது வாழ்வின் பல்வேறு நிகழ்ச்சிகளுக்குத் தன் தீர்வையும் சொல்ல வேண்டும் " [31] என்னும் செர்னிசெவ்ஸ்கியின் கருத்தும்

சோசலிச நடப்பியலை விளக்குவது ஆகும்.

சோசலிச நடப்பியலின் அழகியல் அடிப்படைகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறுவர்:

1. பொதுவுடைமைத் தத்துவத்தில் ஈடுபாடு.
2. மக்களுக்குத் தொண்டு செய்தல்.
3. சுரண்டப்படும் வர்க்கத்திற்குச் சார்பாக நிற்றல்.
4. தொழிலாளர் போராட்டங்களில் நெருங்கிய தொடர்பு.
5. சோசலிச மனித நேயம்.
6. உலகப் பார்வை.
7. சமுதாயம் முன்னோக்கித்தான் வளரும் என்ற நம்பிக்கை.
8. உருவ வாதம், அகநோக்கு, பழமை வாதம் ஆகியனவற்றுக்கு எதிர்ப்பு.[32]

சோசலிச நடப்பியலின் தோற்றம் குறித்து இரண்டு வகையான கருத்துகள் நிலவுகின்றன. அவை:

1. 19 ஆம் நூற்றாண்டு நடப்பியல் வரலாற்றின் இயல்பான பரிணாம வளர்ச்சியே சோசலிச நடப்பியல்.
2. ஸ்டாலின் கால அரசியல் நடவடிக்கை சோசலிச நடப்பியல்.

1. நடப்பியலின் வளர்ச்சி சோசலிச நடப்பியல்:

நடப்பியலிலிருந்து தோன்றிய விமர்சன நடப்பியல், சோசலிச நடப்பியலுக்கு மூலம் என்ற கருத்தும் உண்டு. தம் காலச் சமுதாயத்தை விமர்சித்த கலகக்காரர்களை விமரிசன நடப்பியல் படைப்புகள் சித்தரித்த போதிலும் சமுதாய பொருளாதார விதிகளையும் காரணங்களையும் பற்றிய சரியான, ஆழ்ந்த தெளிவுடன் அந்தவிமர்சனம் செய்யப்படவில்லை. எனவே இப்போதாமைகளை நிறைவு செய்யும் விதத்தில் சோசலிச நடப்பியல் தோன்றியது[33] என்று சோசலிச நடப்பியலின் தந்தை எனக் கருதப்படும் கார்க்கி கூறுகிறார்.

தமிழகத்திலும், முதலாளியக் கண்ணோட்டத்திலான நடப்பியல், விமரிசன நடப்பியல் என்னும் இலக்கியக் கோட்பாடுகளின் தொடர்ச்சியாகவும், தொடர்ச்சியின்மையாகவும் பாட்டாளி வர்க்கக் கண்ணோட்டத்திலான சோசலிச நடப்பியல் உருவெடுத்தது[34] என்னும் கருத்துடைய மார்க்சியர் உளர்.

1932 ஆம் ஆண்டில் சோவியத் எழுத்தாளர்கள் அனைவரையும் ஒரே அமைப்பாக ஒருங்கிணைக்கும் சோவியத் எழுத்தாளர்கள் சங்கம் நிறுவப்பட்டது. இச்சங்கம் நிறுவப்பட்ட காலத்தில்தான் சோசலிச நடப்பியல் சோவியத் எழுத்தாளர்களின் இலக்கியக் கோட்பாடாகுமென்று அறிவிக்கப்பட்டது. 1932 இல் நிறைவேற்றப்பட்ட கட்சித் தீர்மானத்தின் தொடர்விளைவாகவே அரசாங்கத்தின் கலை இலக்கியக் கொள்கை உருவாக்கப்பட்டது.[35] இதன் மூலவர்கள் கார்க்கியும் ஸ்டாலினும் ஆவர்.

நடப்பியலின் பிரதிபலிப்புதான் கலை. எனவே சோவியத் நாட்டில் மலரக் கூடிய நடப்பியல், பொதுவுடைமை உணர்வு விரவியுள்ளதாகவே இருக்க வேண்டும் என்ற கருத்திலிருந்து சோசலிச நடப்பியல் உருவாகியது எனலாம். சோசலிச நடப்பியலைத் தமிழகத்துக்கு முதன் முறையாக விஞ்ஞான பூர்வமாக அறிமுகப்படுத்திய பெருமை ஜீவானந்தத்தையே சாரும்[36] என்பர். தமிழ்நாட்டில் மார்க்சியத்தை வழிகாட்டியாக ஏற்றுக்கொண்ட கலை இலக்கிய அமைப்புகள் சிலவும் சோசலிச நடப்பியலை விமர்சனம் இன்றி ஏற்றுக் கொண்டு பின்பற்றின.

" வாழ்க்கை, இன்று எப்படி இருக்கிறது என்பதைச் சித்தரிப்பதோடல்லாமல் அது எப்படி இருக்க வேண்டும் என்பதையும் தங்களது படைப்புகளில் கோடிட்டுக் காட்டுவதன் மூலமே ஒரு எழுத்தாளன் தனது சமுதாயக் கடமையை முழுமையாகச் செய்ய முடியும். இதையே இலக்கியத்தில் சோசலிச எதார்த்தவாத அணுகுமுறை என்கிறோம் "[37] என்று தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் கொள்கை அறிக்கை கூறுகின்றது.

" கூர்மையும் வலிமையும் இலக்கியத்திற்கு உருவாக்கித்தரத்தக்க

பார்வையே சோசலிச யதார்த்த வாதமாகும். ஆனால் சோசலிசம் என்பது எப்படி வறட்டு வாய்பாடு இல்லையோ அதேபோல சோசலிச எதார்த்தமும் வறட்டுத் தத்துவ வாய்பாடல்ல."[38] என்று தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றத்தின் கொள்கை அறிக்கை குறிப்பிடுகிறது.

" வர்க்க பேதமற்ற ஒப்பில்லாச் சமுதாயத்தைச் சிருஷ்டிக்க மனிதப் பெருங்குடி மக்கள் நடத்தும் போராட்டத்தையும் அதில் தோன்றும் புதிய சமுதாய அமைப்பையும் பிரதிபலிக்கும் சோசலிஸ்ட் எதார்த்தவாதம் என்ற இலக்கியத் தத்துவத்தை இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கம் தனது இறுதி இலட்சியமாக ஏற்றுக்கொள்கிறது "[39] என 1954 ஆம் ஆண்டு இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் அறிக்கை கூறுகிறது.

இதேபோன்று நா.வானமாமலை, [40] ரகுநாதன், [41] சி.கனகசபாபதி [42] போன்றோர் சோசலிச நடப்பியலை ஏற்று ஆதரித்து எழுதியுள்ளனர்.

2. ஸ்டாலின் கால அரசியல் நடவடிக்கை சோசலிச நடப்பியல்:

19 ஆம் நூற்றாண்டு நடப்பியலின் பரிணாம வளர்ச்சியே சோசலிச நடப்பியல் என்னும் கருத்தை சோவியத் திறனாய்வாளர்களும், ஸ்டாலின் காலத்துத் திடீர்க்கண்பிடிப்பே சோசலிச நடப்பியல் என்னும் கருத்தை முதலாளிய நாட்டு விமர்சகர்களும் முன் வைத்துள்ளனர் [43] என்று அ.மாரியப்பன் மொழிகின்றார்.

சோசலிச நடப்பியல், இலக்கியக் கோட்பாடுகளின் பரிணாம வளர்ச்சியின் வெளிப்பாடு அன்று; அது ஸ்டாலின் தன் அரசியல் இருப்பை நிலைப்படுத்திக் கொள்ள எடுத்த ஓர் அரசியல் நடவடிக்கையே என்னும் கருத்துடைய மார்க்சியர்களும் உளர். ரசிய நாடகக்கலைஞர் மெயர் கோல்ட், 1939 இல் நடைபெற்ற நாடக இயக்குநர்கள் மாநாட்டில், " சோசலிச யதார்த்தவாதம் எனக் கூறப்படும் இந்தப் பரிதாபகரமான வீரியமற்ற

விசயத்திற்கும் கலைக்கும் எவ்விதச் சம்பந்தமுமில்லை "[44] என்று கூறியுள்ளார்.

" 1934ல் நடைபெற்ற சோவியத் எழுத்தாளர் மாநாட்டில் முதன்முதலாக எடுத்துரைக்கப்பட்ட சோசலிச யதார்த்தவாதக் கோட்பாடு இலக்கியத் துறையிலே செல்லுபடியாகக் கூடியவற்றின் அரசியல் உரைகல் ஆயிற்று "[45] என்பார் அலன் ஸ்விஞ்வுட். தமிழகத்திலும் ரகுநாதன், கா.சிவத்தம்பி, ஞானி, எஸ்.வி.ராஜதுரை அ.மார்க்ஸ் முதலியோர் சோசலிச நடப்பியல், ஸ்டாலின் காலத்து அரசியல் நடவடிக்கையே என்னும் கருத்து உடையவர்களாக விளங்குகின்றனர்.

" கட்சி அதிகாரத்தை இலக்கியத்தின் மூலம் செயல்படுத்துவதற்காக உருவாக்கப்பட்டதுதான் சோசலிச யதார்த்தவாதம் "[46] என்றும், " சோசலிச யதார்த்தவாதம் என்ற பெயரால் கட்சித்தீர்மானங்களுக்கேற்ற வெறும் கற்பனையான, ஒற்றைப்பரிமாண, தட்டையான பாத்திரங்களே இலக்கியப் படைப்புகளில் உருவாக்கப்பட்டன "[47] என்று கருதுகிற மார்க்சியர்கள் தமிழகத்திலும் உண்டு.

சோசலிச நடப்பியலை ' ஸ்தானோவியம் ' ( Zhadonivism) என்று விமர்சனம் செய்யும் மார்க்சியர்களும் உண்டு. சோவியத்பொதுவுடைமைக் கட்சியின் மையக் குழுவின் செயலாளராக இருந்தவர் ஸ்தானோவ் (Zhadonov ) " சோசலிச யதார்த்தவாதம் என்ற பெயர் பெற்ற இந்தக் கோட்பாட்டை உருவாக்கிய முதல்வர்களில் முக்கியமானவர்கள் ஸ்தானோவ். இதனை ஸ்தானோவியக்கோட்பாடு என்று சொல்வதும் பொருந்தும் " [48] என்பார் ஞானி.

கலை இலக்கியங்களுக்கு முற்றிலும் அரசியல் அடிப்படையிலான வரையறைகள் - குறிக்கோள்களைத் தருவது, கலை இலக்கியவாதிகளை அரசியல் வாதிகளாகவோ, அரசியல் வாதிகளுக்குக் கருவிகளாகவோ ஆக்குவது, ஒரு நாட்டின் சமுதாய மாற்றத்தில் அரசியல் வாதிகளுக்கே முழு முற்றான பொறுப்பு உண்டு என்பது போலவும் அரசியலுக்குப் பிறதுறைகள் உட்பட வேண்டும் ; அரசியலின் நோக்கத்தை - வரையறையைக் கலை, இலக்கியம், தத்துவம்

போன்ற முறைகள் ஏற்க வேண்டும் என்றும் வற்புறுத்துவது ஸ்தானோவியம்[49] என மார்க்சியர் வரையறுத்துள்ளனர்.

" சோசலிசம் என்பது எப்படி வெறும் வறட்டு வாய்ப்பாடு இல்லையோ அதேபோல் சோசலிச எதார்த்த வாதமும் வறட்டுத்தத்துவ வாய்ப்பாடு அல்ல "[50] என்று 1976 இல் கூறிய ரகுநாதன் தற்போது, " இடது சாரிகளான நாமும் இந்த ஸ்தானோவிசத்துக்கும் ஸ்டாலின் காலத்திய சோசலிச எதார்த்தவாதத்துக்கும் ஆளாகியிருந்தோம் "[51] என்று சுயவிமரிசனம் செய்து கொள்கின்றார்.

ஸ்தானோவியப் போக்கு சரியானதே என்று அதை ஆதரிக்கும் மார்க்சியர்களும் தமிழில் உளர். " (ஸ்தானோவியம்) என்பது, கலையியலை அழுகுணர்வைப்புறக்கணிப்பதும் அன்று. ஆனால் சரியான அரசியல், நேர்த்தியான அழகியல் ஆகிய இரண்டையும் அது இணைக்க முயல்கிறது "[52] என்றும், "சரியான அரசியலையும் நேர்மையான உன்னதமான கலையையும் இணைக்க வேண்டும் எனக் குறிப்பிட்ட ஸ்தானோவியம் சில நடைமுறைக் குறைபாடுகளுடன் மிகச்சரியானதே ஆகும் "[53] என்று குறிப்பிடும் மார்க்சியர் ஸ்தானோவியத்தை ஆதரிப்பது புலனாகின்றது.

இந்திய - தமிழக அரசியல், பொருளியல், சமூகச் சூழலில் ' சோசலிச நடப்பியல் ' என்னும் இலக்கியக் கோட்பாட்டிற்கு இடமில்லை என்று சில மார்க்சியர்கள் கருதுகின்றனர். " புரட்சிக்கு முந்திய காலகட்டங்களில் விமர்சன யதார்த்தவாதம் இருக்கும்; புரட்சிக்குப்பிறகேசோசலிச யதார்த்த-வாதம் முக்கியத்துவம் பெறும் "[54] என்பார் நு.ஃமான். மேலும், " எதார்த்த-வாதம் என்பது கலை இலக்கியக் கோட்பாடு. இந்தியச் சூழலில் சோசலிசத்தைக் கருவாகக் கொண்ட அரசியல் இல்லை. ஆகவே சோசலிச எதார்த்த வாதம் பற்றி இந்தியச் சூழலில் பேசுவதற்கு அர்த்தம் இல்லை "[55] என்று ஞானி குறிப்பிட்டுள்ளார்.

இவர்களின் கருத்துகளுக்கு வலுவூட்டுவதாக, ரசிய மார்க்சிய அழகியல் ஆய்வாளர் ஆவ்னர்சிஸ் கூறும் கருத்து அமைந்துள்ளது. "முதலாளித்துவ சமூகத்தின் கலையுலகில் சோசலிச யதார்த்தவாதம் இருக்கமுடியாது " [56] எங்கிறார் ஆவ்னர்சிஸ். இந்தியா ஒரு முதலாளியச் சமூக அமைப்பினை உடையது என்பதில் மார்க்சியர்களுக்கிடையில் கருத்து வேறுபாடில்லை.

" 'சோசலிசம்' என்பது அரசியல் அமைப்புப்பற்றிய ஒரு சொல்; 'எதார்த்தவாதம்' என்பது அழகியல் சம்பந்தப்பட்ட சொல். இவை இரண்டையும் இணைத்த காரணத்தால்தான் 'சோசலிச எதார்த்தவாதம்' என்ற பதச்சேர்க்கை அர்த்தமற்றதாகவும் பொருத்தமற்றதாகவும் இருக்கிறது. இதனால்தான் சோசலிச எதார்த்தவாதம் என்று சொன்னால், முதலாளித்துவ எதார்த்தவாதம், ஏகாதிபத்திய எதார்த்தவாதம் என்றெல்லாம் உண்டா? "[57] என்று வினவுகின்றார் ரகுநாதன்.

சோசலிச நடப்பியலுக்கு மாற்றான பெயரீடு இந்தியச் சூழலில் எதுவாக இருக்கமுடியும் என்றும் சில மார்க்சியர் சிந்தித்துள்ளனர். " வேறுபட்ட, அனுமதிக்கத்தக்க தவிர்க்க முடியாத பரந்துபட்ட அர்த்தபாவத்துக்கு ஏற்றவகையில் இப்பதச் சேர்க்கையை ' சமூக எதார்த்தவாதம் ' என மாற்றிவிடலாம் "[58] எங்கிறார் ஒரு மார்க்சிய அறிஞர். "சோசலிச எதார்த்தவாதம் என்ற தொடரைக் காட்டிலும் 'மார்க்சிய எதார்த்தவாதம்' என்ற பொதுப்பெயர் பெரும்பாலும் பொருந்தலாம்"[59] என்கிறார் பிறிதொரு மார்க்சிய ஆய்வாளர்.

சோசலிச நடப்பியலை விமர்சனத்திற்கு உட்படுத்தும் மார்க்சியர்களை சோசலிச நடப்பியலை ஆதரிக்கும் மார்க்சியர்கள் கடுமையாக விமர்சனம் செய்துள்ளனர்.

" 'ஸ்டாலினியம்' 'ஸ்தானோவியம்' என இவர்களாகவே முத்திரைகளைத் தயாரித்துக் கொண்டுவந்து, சோசலிச எதார்த்தவாத நோக்கில் உருவாக்கப்படும் படைப்புகளையும், படைப்பாளர்களையும் அடித்துக்கிழித்தெறிய முயன்றார்கள். இன்றைய கேடுகெட்ட முதலாளித்துவ

சமுதாய அமைப்பினை எப்பாடுபட்டேனும் கட்டிக்காத்திட வேண்டும் என்பது தான், சோசலிச யதார்த்தவாத எதிர்ப்புச் சிந்தனையாளர்களின் ஒரே நோக்கம்...' சோசலிச யதார்த்தவாதம் என்பது இலக்கியக் கொள்கையே அல்ல; வெறும் அரசியல் கோட்பாடு' என்றும், 'ஸ்டாலின் காலத்திய அதிகாரவர்க்கக் கண்டுபிடிப்பு ' என்றும், ' படைப்புத் தொழிலுக்கு அந்நியமானது' என்றும்... நச்சுமொழிகளைச் சொல்லி வந்தார்கள் [60] என்பார் ஒரு மார்க்சியர்.

இக்கருத்துடைய மார்க்சியர்களின் நிலைப்பாட்டுக்கு வலுவூட்டும் வண்ணம் ரசிய இலக்கிய ஆய்வாளரின் கருத்து அமைந்துள்ளது. " சோசலிச எதார்த்தவாதம் எழுத்தாளர்கள் மீதும்மற்றும் கலைஞர்கள் மீதும் சுமத்தப் - பட்டது என்று அறியாமைமிக்க அல்லது ஒருபுறச் சாய்வான மக்கள் மட்டுமே சொல்ல முடியும் [61] என்பார் யூரி குஸ்மேன்கோ.

சோசலிச நடப்பியலை, அது தோன்றிய ரசிய நாட்டிலும், தமிழகத்திலும் ஏற்றுக்கொண்ட ஒரு குழுவும் விமர்சனத்துக்கு உட்படுத்தும் ஒரு குழுவும் இருந்துள்ளன. தமிழில் மரபு மார்க்சியர், சோசலிச நடப்பியலை ஆதரித்தும், அந்நியமாதல் மார்க்சியரும் அமைப்பியல் மார்க்சியரும் விமர்சனத்திற்கு உட்படுத்தியும் செயல்பட்டுள்ளனர். இம் முரண்பாட்டிற்குரிய மூலத்தை ஆராய்ந்தால், ஸ்டாலினிய அரசியலை ஏற்றுக்கொள்ளல் ( மரபு மார்க்சியர் ),அல்லது விமர்சித்தல் ( அந்நியமாதல் மார்க்சியர்,அமைப்பியல் மார்க்சியர்) என்னும் நிலைப்பாடுகளின் வெளிப்பாடுகளாக இம்முரண்பாடுகளைக் காணமுடிகிறது.

சோசலிச நடப்பியல் என்னும் இலக்கியக் கோட்பாட்டின் விவாதங்களுக்குள் அடிச்சரடாக ஓடுவது அரசியல் நிலைப்பாடுகளே என்பது இவ்ஆய்வின் வழி புலனாகின்றது.

3. தமிழில் மார்க்சிய இலக்கியத் திறனாய்வுப் போக்குகள்

தமிழகத்துக்குப் பொதுவுடைமைக்கட்சி, மார்க்சியத்தை அறிமுகப்படுத்தியது. எனினும் சோசலிசம் முதலிய கருத்தாக்கங்கள், தேசியப்போராட்ட இயக்கங்கள் மற்றும் சமதர்ம இயக்கங்கள் வழியிலும் ஓரளவு முன் வைக்கப்பட்டன. 1920 - 30 களில் இந்திய மண்ணில் மார்க்சியம் அறிமுகமானதைத் தொடர்ந்து 1930-50 காலப்பகுதியில் தமிழகத்தில் அறிமுகமாயிற்று.[62]

1950 களில் மார்க்சியம் அறிமுகமான பின்னர் தமிழகத்தில் பொதுவுடைமைக் கட்சிகள் தோன்றின. இந்தியப் பொதுவுடைமைக் கட்சி ( 1925 ), இந்தியப் பொதுவுடைமைக்கட்சி - மார்க்சிஸ்ட் ( 1964 ) இந்தியப் பொதுவுடைமைக்கட்சி - மார்க்சிஸ்ட் லெனினிஸ்ட் (1969) முதலிய கட்சிகள், கலை இலக்கிய அமைப்புகளையும் தோன்றுவித்தன. தமிழ்நாடு கலை இலக்கியப்பெருமன்றம் (1961), தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் (1975), புரட்சிப்பண்பாட்டு இயக்கம், மக்கள் கலாச்சாரக் கழகம், மக்கள் கலை இலக்கியக்கழகம் (1978) முதலியன அவ்வாறு தோன்றியன ஆகும்.

இவ்வமைப்புகளின் சார்பில் மார்க்சிய நோக்கில் இலக்கிய இதழ்கள் வெளிவரத்துவங்கின. அவ்வாறு வெளியான முதல் இலக்கிய இதழ் 'புதுமை இலக்கியம்'[63] (1950) என்பர்.

விடிவெள்ளி (1950), சாந்தி (1954), சரஸ்வதி (1955) தாமரை (1958), சமரன் (1962), மல்லிகை (இலங்கை, 1965), புதிய தலைமுறை (1967), ஆராய்ச்சி (1969), செம்மலர் (1969), மனிதன் (1970), கார்க்கி (1973), சிகரம் (1975), சமர் (இலங்கை, 1979) மனஓசை (1981), மார்க்சியம் இன்று (1984), திணை (1993) முதலிய இதழ்கள் மார்க்சிய நோக்கிலான இலக்கியப் படைப்புகளையும் இலக்கியத் திறனாய்வுகளையும் வெளியிட்டன.

மார்க்சியத்தின் அடிப்படைகளை ஏற்றுக்கொண்டு கட்சிச் சார்பின்றித் திறனாய்வுக் கட்டுரைகளை வெளியிட்ட இதழ்களும் உள. பரிமாணம் (1978), இலக்கிய வெளிவட்டம் (1979), படிகள் (1978), மேலும் ( 1989 ), அலை (இலங்கை, 1978) முதலிய இதழ்கள் இந்நோக்கில் வெளிவந்தன. மார்க்சிய இலக்கிய ஆய்வு வளர்ச்சிக்கு இவை போன்ற இதழ்களே பெரிதும் துணை புரிந்துள்ளன.

தமிழில் இதுவரை நடைபெற்றுள்ள இலக்கியத் திறனாய்வுகளை மூன்று முக்கிய வகைகளாக மார்க்சியர் காண்கின்றனர். அவை :

1. இலக்கியவியல் திறனாய்வு (க.நா.சுப்பிரமணியம்,சி.சு.செல்லப்பா)
2. கல்வியியல் திறனாய்வு (மு.வரதராசனார்,அ.ச.ஞான சம்பந்தன்)
3. மார்க்சியவியல் திறனாய்வு (க.கைலாசபதி, நா.வானமாமலை)[64]

இலக்கியவியல் திறனாய்வாளர்கள், அழகியல் கூறுகளுக்கு முதன்மை அளித்து உள்ளடக்கத்திற்கு இரண்டாம் இடம் அளித்தனர். கல்வியியல் திறனாய்வுக் குழுவினர், தமிழ் இலக்கியங்களின் கால வரையறை, தமிழ் இலக்கிய நயங்கள், தமிழ்ப்பண்பாட்டின மேன்மை, தமிழர்களின் வீரம் முதலியவற்றிற்கு முதன்மை அளித்து ஆய்வுகளை மேற்கொண்டனர்.

மார்க்சியர்கள் இவ்விரண்டு குழுவினரிலிருந்தும் வேறுபட்ட அடிப்படைகளில் இலக்கியத்தை ஆராய முற்பட்டனர். உள்ளடக்கத்திற்கு முதன்மை அளித்தனர். இலக்கியத்தின் வர்க்கச் சார்பையும், படைப்பாளியின் வர்க்கச் சார்பையும் கண்டு பிடிப்பதில் குறியாய் இருந்தனர். இலக்கியத்தை ஆய்வதற்கு அரசியல், பொருளியல் கட்டமைப்புகளை அடிப்படையாகக் கொண்டனர். கலை, இலக்கியம் என்பன வாழ்வு பற்றிய ஆராய்ச்சி, வாழ்வு சமுகத்தில் அடங்கிஉள்ளது. சமுதாயம் அரசியல் நிறுவனங்களால் ஆளப்படுவது. எனவே இலக்கியப்படைப்பாளிகள் மற்றும் திறனாய்வாளர்கள் அரசியலைத் தேர்ந்தெடுப்பது தவிர்க்க முடியாதது.

சமுகம் என்பது வர்க்க முரண்பாடுகளைக் கொண்டது. சமுகத்தை

முன்னோக்கிச் செயல்படுத்துவது, வர்க்கப்போராட்டம். இதற்குத் தலைமை தாங்குவது மார்க்சிய இயக்கம். இவ்வகையில் மார்க்சியர் இலக்கிய ஆய்வில் அரசியல் பார்வைகளைச் சார்ந்தே தமிழ்ச் சூழலில் இயங்கி வருகின்றனர்.

தமிழ்ச் சூழலில் இயங்கிவரும் இம்மார்க்சியர்களின் திறனாய்வு முடிவுகள், ஒத்த தன்மை கொண்டனவாக அமையவில்லை. ' மார்க்சியம் ' என்ற ஒரே கோட்பாட்டின் அடிப்படையில் இவர்கள் ஆய்வுகளை நிகழ்த்தியிருந்தாலும் முரண்பாடுகள் கொண்ட முடிவுகளை வெளிப்படுத்தியுள்ளனர். எனவே சார்புத் தன்மைகளின் அடிப்படைகளில் இவர்களை வகைப்படுத்திப் பார்க்க வேண்டியநிலை ஏற்படுகிறது.

இந்தியாவில் – தமிழகத்தில் மார்க்சியத்தை வழி காட்டும் நெறியாக ஏற்றுக்கொண்டு செயல்படும் பல்வேறு பொதுவுடைமைக் கட்சிகள் உள்ளன. இப்பொதுவுடைமைக் கட்சிகள் எடுக்கும் நிலைப்பாடுகளின் சார்பில் நின்று, இலக்கியத்தை ஆராயும் மார்க்சியர் உள்ளனர். மார்க்சிய நெறியை ஏற்றுக்கொண்டு கட்சிகளைச் சார்ந்து நில்லாமல் இலக்கிய ஆய்வுகளை மேற்கொள்ளும் மார்க்சியர்களும் தமிழகத்தில் உள்ளனர்.

நிறுவனம் சார்ந்தவர்கள் (ஜீவானந்தம், நா.வானமாமலை, எஸ்.தோதாத்ரி), நிறுவனம் சாராதவர்கள் (எஸ்.என்.நாகராசன், ஞானி, குணா, எஸ்.வி.ராஜதுரை, அ.மார்க்ஸ்) எனத் தமிழக மார்க்சியத் திறனாய்வாளர்களை இருவகைப்படுத்துவர்.[65]

நிறுவனம் சார்ந்த மார்க்சியர்களுக்கிடையிலும் ஒத்த கருத்துகள் இல்லை. தமிழகத்தில் உள்ள பொதுவுடைமைக் கட்சிகளைச் சார்ந்த மார்க்சி – யர்களின் முடிவுகள் அவர்களின் கட்சி நிலைப்பாடுகளுக்கு ஏற்ற வகையில் அமைவதைக் காண முடிகிறது. " மார்க்சியம் என்ற ஒன்றையே நோக்காகக் கொண்ட குழுக்களின் பிரிவு விரிவடைவது போலவே இலக்கிய ஆய்விலும் அக்குழுவினர் பிரிந்து நிறைந்துள்ளனர். இவர்களுக்குள் இருக்கும் வேறுபாடுகளை இனம் காணுவது

இன்றியமையாதது. இந்தியப் பொதுவுடைமைக் கட்சி, இந்தியப் பொதுவுடைமைக் கட்சி (மார்க்சிஸ்ட்), மார்க்சிய லெனினியக் கட்சிகள் ஆகிய முப்பிரிவினரின் இலக்கியப்பார்வையும் வேறுபடுகின்றது "[66] என்னும் கூற்று இவ்விடத்தில் சிந்திக்கத்தக்கது ஆகும்.

தமிழக மார்க்சியர்களை வேறு அடிப்படைகளில் வகைப்படுத்திப் பார்ப்பவர்களும் உள். புறநிலையை ஆதரிக்கும் பார்வை, அகநிலையை ஆதரிக்கும் பார்வை என்றும் வகைப்படுத்துவர்.[67] 1950 முதல் 1996 வரை தமிழில் செய்யப்பட்டுள்ள மார்க்சிய இலக்கிய ஆய்வுகளை மூன்று வகையாகப் பகுக்கலாம். அவை : 1. மரபு மார்க்சிய நோக்கு. 2. அந்நியமாதல் மார்க்சிய நோக்கு. 3. அமைப்பியல் மார்க்சிய நோக்கு.

அ. மரபு மார்க்சிய நோக்கு :

அடிக்கட்டுமானம்தான் மேற்கட்டுமானத்தைத் தீர்மானிக்கும் என்னும் பார்வையை மரபு மார்க்சியம் என்று குறிப்பிடலாம். உற்பத்தி உறவுகளை-விட உற்பத்திச் சக்திகளுக்கு முதன்மை அளிக்கும்; நட்பு முரண்களைவிடப் பகை முரண்களுக்கு அழுத்தம் கொடுக்கும்; வர்க்கப் போராட்டத்தைச் சொல்லுவது இலக்கியம்; ஆளும் வர்க்கத்தின் பிரதிநிதி படைப்பாளி; கலை இலக்கியம் ஏதாவது ஒரு வர்க்கத்திற்குச் சேவை செய்வதாகவே இருக்கும் என்றும் இது கருதும். இலக்கியம் என்பது வர்க்கப்போராட்டத்தைத் தூண்டி, உழைக்கும் வர்க்கத்திற்குச் சார்பாக அமைய வேண்டும் என்று இக்குழுவினர் கருதுவர்.

கோ.கேசவன், எஸ்.தோதாத்ரி, ரகுல், நெல்லை ஆய்வுக் குழுவினர் ஆகியோர் சுயவிமர்சனங்கள் எதற்கும் தயாராக இல்லாமல் இலக்கியம் தொடர்பான மரபு மார்க்சியப்பார்வையை உயர்த்திப்பிடிப்பவர்கள் [68] என்று அ.மார்க்ஸ் குறிப்பிட்டுள்ளார்.

நெல்லை ஆய்வுக்குழுவில் நா.வானமாமலை, வெ.கிருஷ்ணமூர்த்தி,

முப்பால் மணி ஆகியவர்கள் மரபு மார்க்சியத்தில் அழுத்தம் கொண்டிருந்தனர். தி.சு.நடராசன், ந.முத்துமோகன் ஆகியோர் இவர்களிடமிருந்து வேறுபட்டவர்கள் ஆவர். முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தைச் சார்ந்த திறனாய்வாளர்கள் கே.முத்தையா, ச.செந்தில்நாதன், அருணன் ஆகியோர்களையும் மரபு மார்க்சியர் என்றே மதிப்பிட முடியும். மார்க்சிய லெனினியப் புரட்சிக்குழுக்கள் எனத் தெரிய வரும் சில குழுக்களையும் மரபு மார்க்சியப் போக்கினர் என்றே வகைப்படுத்துவது பொருந்தும்.

க.கைலாசபதியிடம் மரபு மார்க்சியப் பார்வையின் தாக்கம் இருந்தது என்று மதிப்பிட்டுள்ளனர். " க.கைலாசபதி கொண்டுவந்த மார்க்சியம் விமர்சனத்துக்குரிய மார்க்சியம் என்பதை[illegible] சொல்லவேண்டும். இவர் தந்த மார்க்சியத்தில் இயந்திரத் தன்மை நுணுக்கமாகவும், அறிவாற்றலுடனும் செறிந்திருந்தது. மார்க்சியத்தின் தத்துவசாரம் இதில் அருகியிருந்தது "[69] என்றும் " கைலாசபதியின் இலக்கியக் கோட்பாடுகள், மார்க்சியச் சிந்தனை வரலாற்றில் மிகவும் உறைந்துபோன ஒரு போக்காக இருப்பது துரதிருஷ்டவசமானதாகும். அடிக்கட்டுமானம் நேரடியாக மேற்கட்டுமானத்தில் பிரதிபலிக்கிறது என்ற சூத்திரத்தின் பேரில் எழும், தத்துவ வளமற்ற போக்கில் இலக்கிய விமர்சனம் உருவாக்கப்பட்டது "[70] என்றும் கூறுவர்.

கேசவன் இலக்கியப்பார்வையையும் எந்திரவியல் பார்வையிலானது என்று மதிப்பிட்டுள்ளனர். " கேசவனின் கலை இலக்கியம் பற்றிய 'கறாரான' பாட்டாளி வர்க்க நோக்கு சாராம்சத்தில் அகநிலைச் சார்பானது (Subjective ) என்றே சொல்லத் தோன்றுகிறது. ஆனால் சரியான மார்க்சியப்பார்வை முற்றிலும் புறநிலையானதாக (Objective ) அமைய வேண்டும் "[71] என்பர்.

தொடக்கக்காலத் தமிழ் மார்க்சியர்களிடம் மரபு மார்க்சியத்தின் செல்வாக்கை அதிகம் காண முடிகிறது. தொடக்கக்கால மார்க்சியர்களில்

பெரும்பாலோர் கட்சி சார்ந்து, அரசியல் நிலைப்பாடுகளுக்கு முதன்மை அளித்தமை இதற்குக் காரணமாக இருந்தது என்று கருதலாம். இன்று உலகம் முழுதும் மரபு மார்க்சிய நோக்கில் தேக்கம் ஏற்பட்டுள்ளது. தமிழிலும் தற்பொழுது மரபு வழி மார்க்சிய இலக்கிய ஆய்வில் பெருந்தேக்கம் ஏற்பட்டுள்ளது என்று மதிப்பிடலாம்.

## ஆ. அந்நியமாதல் மார்க்சிய நோக்கு :

மார்க்சியத்தின் மையக் கருத்துகளில் ஒன்றான ' அந்நியமாதல் ' என்னும் கோட்பாட்டின் அடிப்படையில் அனைத்தையும் விளக்கும் போக்கை அந்நியமாதல் மார்க்சியம் என்று வகைப்படுத்தலாம். காரல் மார்க்ஸ் பாரிசில் இருந்த பொழுது 1844 இல் தன் கருத்துகளைத் தெளிவுபடுத்திக் கொள்ளும் வகையில் எழுதிய புகழ்பெற்ற கையெழுத்துப் படிகள், 'பொருளாதார தத்துவக் கையெழுத்துப்படிகள் 1844' என்று அழைக்கப்படுகின்றன. மாஸ்கோ ஆய்வு நிறுவனத்தில் 1932 இல் இவற்றைக் கண்டெடுத்தவர் ஜார்ஜ் லூ காக்ஸ் ஆவார். இதன்பிறகுதான் மார்க்சின் அந்நியமாதல் என்ற கோட்பாடு உலகிற்குத் தெரியவந்தது.

1932 ஆம் ஆண்டு வெளியான மார்க்சின் ' பொருளாதார, தத்துவக் கையெழுத்துப்படிகள் 1844 ' ( Economic and Philosophic Manuscripts, 1844 ) என்னும் நூ லின் மூலம் அறிமுகமான 'அந்நியமாதல்' கோட்பாடு, மார்க்சியச் சிந்தனைச் சூழலில் உலகம் முழுவதும் ஒரு புதிய தாக்கத்தை ஏற்படுத்தியது. 1960 களில் தமிழிலும் இத்தாக்கம் செயல்படத் தொடங்கியது.

1967 சூலை முதல் 1969 மே வரை கோவையிலிருந்து வெளிவந்த 'புதிய தலை முறை ' என்னும் இதழ் ' அந்நியமாதல் 'தொடர்பான கட்டுரைகளை முதன் முதலில் வெளியிட்டது. இவ்விதழில் எஸ்.என்.நாகராசன்,

'ரமணன்' என்னும் பெயரில் அந்நியமாதல் கோட்பாட்டை அறிமுகப்படுத்தி எழுதினார். " அந்நியமாதல் என்ற பிரச்சனை, மார்க்சியத்தின் மையப் பிரச்சனை. இதனை எங்களுக்குத் தெளிவுபடுத்தியவர் எஸ்.என்.நாகராசன்"[72] என்பார் ஞானி.

" 1954 இல் ஜே.டி.பர்னால் எழுதிய ' மார்க்சியமும் விஞ்ஞானமும் ' என்ற புத்தகத்தைப் படித்தேன். அந்நியமாதலின் மீது அவர் கவனம் கொண்டிருந்தார். அதன் பிறகு தான் அந்நியமாதல் என்றால் என்ன என்று சிந்தித்தேன்... மார்க்சு எழுதிய 'அந்நிய மாக்கப்பட்ட உழைப்பு' என்ற கட்டுரையைப்படித்தேன் " [73]என்று தனக்கு அந்நியமாதல் கோட்பாடு தெரிய-வந்தது பற்றி எஸ்.என்.நாகராசன் குறிப்பிடுகின்றார்.

எஸ்.என்.நாகராசன் அறிமுகப்படுத்திய ' அந்நியமாதல் ' கோட்பாட்டின் அடிப்படையில் ஞானி, எஸ்.வி.ராஜதுரை ஆகியோர்கட்டுரைகள் எழுதினர். 1979 இல் ' அந்நியமாதல் ' என்னும் பெயரில் விரிவான நூல் ஒன்றை எஸ்.வி.ராஜதுரை எழுதினார்.

மார்க்சு தனது கையெழுத்துப்படிகளில் அந்நியமாதலின் மூன்று கூறுகளை எடுத்துரைக்கின்றார்:

1. இயற்கையிலிருந்து
2. சமுதாயத்திலிருந்து
3. இறுதியாகமனிதன் தன்னிலிருந்து அந்நியமாகிறான் – அந்நியப்படுத்தப் படுகிறான்.[74]

மார்க்சைப் பொருத்த வரையில், மனித இன வரலாறு என்பது மனிதனின் முன்னேற்றத்தின் வரலாறு. அதனுடன் கூடுதலாகி வரும் அந்நிய – மாக்கப்படுதலின் வரலாறும் கூட. மார்க்சின் சோசலிச சமுதாயம் என்பது அந்நியமாதல் தன்மையிலிருந்து மனிதனுக்கு விடுதலை, மனிதன் தன்னிலைக்குத் திரும்புதல், தன்னை முழுமையாய் அறிதல் என்பதாகும். இந்த உலகைப்பற்றுகிற

நிலையிலே செயலாற்றும் சக்தியாகத் தன்னை மனிதன் உணராமல் இருப்பதே அந்நியமாதல். இயற்கையிலிருந்தும், பிறரிடமிருந்தும், தன்னிலிருந்தும் மனிதன் அந்நியமாகிறான். மனிதரால் படைக்கப்பட்டவை அவர்களுக்கு மேலாகவும் அவர்களுக்கு எதிராகவும் புறநிலைப் பொருட்களாக நிற்கின்றன.

அந்நியமாதலின் பிடியிலிருந்து விடுபடுவதே மனிதனுக்கு விடுதலைதருவது. எனவே அந்நியமாதலற்ற ஒரு சமூக அமைப்பை நோக்கி வரலாறு முன்னேறுகிறது என அந்நியமாதல் மார்க்சியர் கருதுகின்றனர். அந்நியமாதல் என்றகோட்பாட்டின் அடிப்படையில் கடவுள், மதம், மெய்யியல், கலை, இலக்கியம், வரலாறு ஆகியவற்றை ஒருங்கிணைந்த முறையில் விளக்கமுடியும் என்று அந்நியமாதல் கோட்பாட்டினர் கருதுவர். " தேவாரம், திருவாசகம், திவ்வியப்பிரபந்தம், மட்டும் அல்லாமல் சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரியபுராணம், கம்பராமாயணம் ஆகியவற்றை அந்நியமாதல் என்ற கோட்பாட்டின் மூலம் தான் சரியாகப் புரிந்து கொள்ள முடியும் " [75] என்பர் அந்நியமாதல் மார்க்சியர்.

' அந்நியமாதல் ' பற்றிய மார்க்சின் கருத்தாக்கம் மார்க்சியர்களுக்கிடையே பெரும் விவாதத்தை உருவாக்கியுள்ளது. உடைமைவர்க்கச் சிந்தனைகளின் செல்வாக்கிலிருந்து தம்மை முழுமையாக விடுவித்துக் கொள்ளாத இளம்மார்க்சால் கையாளப்பட்ட கருத்தாக்கங்களே ' அந்நியமாதல் ' என்றும், ' மூலதனம் ' போன்ற அறிவியல் அடிப்படையிலான நூல்களை எழுதிய, அந்நியமாதலுக்கு இடம்தராத முதிய மார்க்சையே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் கூறுகிறபோக்கு மார்க்சியர் சிலரிடம் காணப்படுகிறது.

இவ்வாறு மார்க்சைஇளம் மார்க்ஸ், முதிய மார்க்ஸ் என்று பிரித்து ஆய்வுசெய்தவர் பிரெஞ்சு மார்க்சியவாதியாகிய லூயி அல்தூசர் ஆவார். ஆரம்பகால மார்க்சிடம், ' அந்நியமாதல் ' இருந்தது என்றும் பிந்திய கால மார்க்சிடம் ' அந்நியமாதல் ' பற்றிய கருத்துமுதல்வாதச் சிந்தனை அடியோடு அழிந்தது [76] என்றும் அல்தூசர் கூறுகிறார். ஆனால், கொல்லட்டி என்பவர்,

இறுதிக்கால மார்க்சின் எல்லா எழுத்துக்களிலும் இந்த அந்நியமாதல் கருத்தாக்கம் நீக்கமற நிறைந்துள்ளது[77] என்று குறிப்பிட்டுள்ளார்.

" அந்நியமாதல் போன்ற கருத்தாக்கங்கள் மற்றும் அதனடியான மனிதாபிமானம், உன்னத மனிதனைக் குறித்த தேட்டம் முதலியவை கறாரான வரலாற்றுப் பொருள் முதல்வாதப்பார்வையாக இருக்க முடியாது "[78] என்று அந்நியமாதல் மார்க்சியத்தின் மீது சொல்லப்படும் விமர்சனத்திற்கு, "மனிதனின் விடுதலைதான் மார்க்சிய மெய்யியலின் மையம் அல்லது இலக்கு. அந்நியமாதல் என்ற கோட்பாட்டை மார்க்சியத்திலிருந்து எடுத்து வெளியில் எறிந்து விட்டால் மனிதனின் விடுதலைபற்றி, மார்க்சிய மெய்யியல் பற்றிப்பேச முடியாது "[79] என்று அந்நியமாதல் கோட்பாட்டினர் பதில் கூறுவர்.

அந்நியமாதல் கோட்பாட்டினரைப் ' புதியமார்க்சியம் ( Neo Marxism ) பேசுபவர்கள் என்றும் ' புது இடதுகள்' (Neo left ) என்றும் விமர்சனம் செய்யும் மார்க்சியர்களும் உளர். செவ்வியல் மார்க்சியம் எதிர்பார்த்ததுபோல வளர்ச்சியடைந்த ஐரோப்பிய நாடுகளில் புரட்சி வராமை, ஸ்டாலினியம் மார்க்சியத்திற்கு ஏற்படுத்திய நெருக்கடிகள்; 1932 இல்வெளியான மார்க்சின் ' பொருளாதார, தத்துவக் கையெழுத்துப்படிகள் 1844 ' மூலம் அறிமுகமான அந்நியமாதல் சிந்தனை ஏற்படுத்திய கிளர்வு ஆகியவற்றின்பின்னணியில் 'மேலை மார்க்சியம்' உருவாகியது.

மார்க்சியத்தில் போதாமை உண்டு என்று கருதியசிலர் மார்க்சியத்தை விமர்சித்து மேலும் அதைச் செழுமைப்படுத்த முயன்றவர். எர்பர்ட் மார்க்யூஸ், ரைட் மில்ஸ், எரிக்பிரம் போன்ற அமெரிக்க ஆய்வாளர்களும் சார்த்தர், ஆல்பர்ட் காம்யூ, லூசியன் கோல்டுமென், கைடன் போன்ற ஐரோப்பிய அறிஞர்களும் மார்க்சியம் குறித்துக் கூறிய கருத்துகளின் தொகுப்பே 'புது இடது'க் கருத்துகள் என்று கருதப்படுகிறது.

மார்க்சியத்தை வளப்படுத்தும் நோக்கில் தோன்றியது மேலை

மார்க்சியம் என்னும் கருத்தோடு மாறுபடும் மார்க்சியர்களும் உள்ர். ' மேலை மார்க்சியம், மார்க்சியத்தின் அடிப்படைத் தத்துவங்களான இயங்கியல் பொருள் முதல்வாதத்தையும் வரலாற்றுப் பொருள் முதல்வாதத்தையும் அவற்றின் வழி பெறப்பட்ட பிரதிபலிப்புக் கொள்கையையும் மறுக்கிறது "[80] என்று கூறுவர்.

தமிழகத்தில் ' புது இடது'க் கருத்துகளை ' படிகள் ', 'பரிமாணம்', 'இலக்கிய வெளிவட்டம்' 'மார்க்சியம் இன்று' போன்ற இதழ்கள் பரப்பின. இத்தகைய கருத்துகளை எஸ்.என்.நாகராசன், ஞானி, எஸ்.வி.ராஜதுரை, தமிழவன் போன்றோர் எழுதினர்.[81] 'புது இடது'க் கருத்துகள் மார்க்சியத்தைத் திரித்து, குழப்பி, புரட்டுவது என்னும் விமர்சனங்களை அந்நியமாதல் மார்க்சியர் மறுத்துள்ளனர். புதிய அறிவியல் கண்டு பிடிப்புகள், புரட்சிகர மாற்றங்கள் முதலியவை நேரும் பொழுதெல்லாம் மார்க்சியத்தின் அடிப்படைச் சிக்கல்கள் கேள்விக்கு உள்ளாகி விவாதிக்கப்பட்டுச் செழுமைப்படுத்தப் படுகின்றன. இவ்வாறு தோன்றியதுதான் 'நவமார்க்சியம்', என்பது அந்நியமாதல் மார்க்சியரின் நிலைப்பாடு எனலாம்.

அந்நியமாதலை மறுப்பது ஸ்தானோவியம் என்றும் மார்க்சியக் கலை இலக்கியவாதிகளை மலடாக்குவது - முடக்குவது வறட்டுச் சூத்திரவாதமாகிய ஸ்தானோவியம் [82] என்றும் அந்நியமாதல் மார்க்சியர் கருத்துரைப்பர். அந்நியமாதல் மார்க்சியர் தமிழ்ச் சூழலில் கடுமையான விமர்சனங்களுக்கு உள்ளாகினர். எனினும் கடவுள், மதம், புராணங்கள், தொன்மம் ( myth) பக்தி இலக்கியங்கள் முதலியவை பற்றி மரபு மார்க்சியர்களிலிருந்து வேறுபட்ட, புதிய வளமான கருத்தாக்கங்களை முன்வைத்துள்ளனர் என்னும் முடிவை இவர்களது ஆய்வுகளிலிருந்து நாம் பெற முடிகிறது.

### இ. அமைப்பியல் மார்க்சிய நோக்கு :

1960 களின் இடைப்பகுதியில் பிரெஞ்சு நாட்டில் தோன்றிய

'அமைப்பியல் மார்க்சியம்' ( Structuralist marxism ) அந்நாட்டில் இடதுசாரி வட்டாரங்களிலும், பின்னர் இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளிலுள்ள பல்கலைக்கழக வட்டாரங்களிலும், சிந்தனையாளர்கள் நடுவிலும் செல்வாக்குச் செலுத்தியது. அமைப்பியல் மார்க்சியத்தின் மூலவர் பிரெஞ்சு நாட்டைச் சார்ந்த லூ யி அல்தூ சர் ஆவார்.

1980 களின் இறுதியில் உலகெங்கிலும் மார்க்சியமாக அறியப்பட்டிருந்த அரசியல், தத்துவ, விமர்சன, நடைமுறைகளுக்கு ஏற்பட்ட நெருக்கடிகளின் விளைவாகப் புதிய எழுத்து வடிவங்களையும் விமர்சன முறைகளையும் தேடவேண்டிய தேவை ஏற்பட்டது. அப்போது அமைப்பியல் மார்க்சியம் குறித்தஅக்கறைகள் தமிழ்ச்சூழலிலும் ஏற்பட்டன. தமிழில் அமைப்பியல்பற்றி முதலில் வெளிவந்த நூல் தமிழவனின் 'ஸ்ட்ரக்சுரலிசம்' (1982) ஆகும். வெங்கட் சாமிநாதன், தர்மு சீவராம் ஆகியோரது, படைப்புபற்றிய கருத்தாக்கங்களின் எதிர்வினையாகத் தமிழவனின் அமைப்பியல் கட்டுரைகள் வெளியாகின எனலாம்.

படைப்பைப்படைப்பாளி ஒளியில் வெங்கட் சாமிநாதன் கண்டார். படைப்பென்பது படைப்பாளியின் ' உள்ளொளி', தரிசனம்' என்னும் கருத்துகளை தர்மு சீவராம் முன்வைத்தார். படைப்பாளிகளின் சொந்த வாழ்க்கைக்கும், படைப்புக்கும் முரண்பாடு கண்ட இடத்தில் படைப்பை விமர்சிக்காமல் படைப்பாளிகளை விமர்சனம் செய்தனர். வெங்கட் சாமிநாதன், தர்மு சீவராம் போன்றோர் எழுப்பிய கேள்விகளுக்கு விடையளிக்க வேண்டும் என்ற உணர்வில் 'ஸ்ட்ரக்சுரலிசம்' நூல் வெளியானது எனலாம்.

வெங்கட் சாமிநாதன், தர்மு சீவராம் போன்றவர்கள் எழுப்பிய கேள்விகளுக்கு மரபுவழி வந்த மார்க்சியத்திலுள் பதில் கிடைக்கவில்லை. ஆகவே அமைப்பியலுக்குள் விடைகளைத் தேடிக்கண்டு பிடிக்கும் முயற்சியில் தமிழவன் ஈடுபட்டார்.

படைப்பாளிக்கு முதன்மை அளிக்காமல் வாசகனுக்கு அமைப்பியல்

முதன்மை அளிக்கிறது. படைப்பு உருவானதும் படைப்பாளி செத்துவிட்டான் என்றும் அமைப்பியல் கருதுகின்றது. தனக்கான கருத்தை அப்படைப்பிலிருந்து வாசகன் உற்பத்தி செய்து கொள்கின்றான் என்றும் அமைப்பியல் கூறுகிறது. அமைப்பியல், வரையறுக்கப்பட்ட கோட்பாடுகள் மூலம் எழுத்தை அணுகுவதில்லை. இலக்கியப் பிரதி ( Text )யை ஒரு பொருளாக ( Art is a meterial object ) முன் வைத்துத் தனது ஆய்வைத் துவக்குகிறது.

அந்நியமாதல் மார்க்சியர், படைப்பை ' உற்பத்தி ' என்னும் அமைப்பியல் கருத்தை ஏற்பதில்லை. " படைப்பு என்பது உற்பத்தியில்லை. உற்பத்தி என்பதனுள் அதன் உற்பத்திக்கான மூலப்பொருட்கள், கருவி, கர்த்தா என்பனவற்றுக்குச் சரியான கணக்குத்தர முடியும். படைப்பு என்ற இயக்கத்தினுள் எவை உட்செல்கின்றன? எப்படி இவை படைப்பாகின்றன என்பதைக் கணக்கெடுக்க முடியாது. மணலும் சுண்ணாம்பும் ஓர் உயர்கொதி நிலையில் கண்ணாடி என்னும் படைப்பாகிறது. படைப்பு என்பது மூலப்பொருட்களின் சேர்க்கை அல்ல – அது மூன்றாவது பொருள். அது புதிய பொருள். "[83] என்று அந்நியமாதல் மார்க்சியர் கூறுவர்.

அமைப்பியலில் ஒரு முக்கியக் கோட்பாடு ' பிரதியியல் ' ( Textualism ) கோட்பாடு ஆகும். ஒரு படைப்பைப் ' பிரதி ' என்று அழைப்பர். ' பிரதி ', வாசகர்களின் அறிவுநிலை, வரலாற்றுச் சூழல் ஆகியவற்றின் அடிப்படையில் அர்த்தத்தை உற்பத்தி செய்து கொண்டிருக்கும் என்று அமைப்பியலார் குறிப்பிடுகின்றனர். சொற்களும் வாக்கியங்களும் தொடர்ந்து எல்லை இல்லா அர்த்தங்களைத் தந்தபடியேதான் இருக்கும் என்று அமைப்பியல் கருதுகின்றது. அர்த்தம் உருவாகையிலேயே அந்த அர்த்தம் நித்தியமான,காலம் கடந்த அர்த்தமல்ல என்ற முத்திரை குத்தப்பட்டேதான் வெளிப்படுகிறது என்றும் அமைப்பியல் குறிப்பிடுகிறது. ஆகவே 'பிரதி' தொடர்ந்த அர்த்த உற்பத்தியில் இருக்கும் என்னும் கருத்து பெறப்படுகிறது.

அமைப்பியல் கூறும் பிரதிக்கோட்பாடு, மார்க்சியர்களுக்குள் உள்ள முரண்பாடுகளைப் புரிந்து கொள்வதற்கு உதவி புரிகின்றது. " எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படுகின்ற, ஒரு முகப்பட்ட மார்க்சியக் கலைக் கோட்பாடு என்று ஒன்று கிடையாது. தேசிய ரீதியிலும் சர்வதேசிய ரீதியிலும் இயங்கும் பல்வேறு மார்க்சிய அரசியல் கட்சிகள், குழுக்கள் ஆகியவற்றுக்கிடையே உள்ள கருத்து முரண்பாடுகள் இதனை உணர்த்தும். மார்க்சியர்கள் எல்லோருக்கும் 'ஆப்த வாக்கியம்' ஒன்றே; ஆனால் விளக்கங்கள் வேறுபடுகின்றன" [84] என்பார் நு.ஃமான்.

மார்க்சியர்கள் முரண்பட்டுக் கிடப்பதற்கு," பொருளாதாரவாத வரலாற்றுவாத, சாராம்சவாத, அழகியல்வாதப் பிடிகளில் இவர்களில் பலர் வெவ்வேறு வகைகளில் சிக்கியிருப்பதே காரணம்" [85] என்று கூறப்படுகிறது. நாம் உற்பத்தி செய்கின்ற பிரதி என்பது இன்னொரு மாற்றுப்பிரதி மட்டுமே; நாம் உருவாக்கிய பிரதிதான் உண்மையானது - சரியானது என்று கருதுவதகூடாது என்று அமைப்பியல் கூறுகிறது.

'மேலும்' (பாளையங்கோட்டை,1989),'நாட்டார் வழக்காற்றியல் (பாளையங்கோட்டை 1987), 'வித்யாசம்' (பெங்களூர் 1994 ) முதலிய இதழ்கள் அமைப்பியல் நோக்கிலான கட்டுரைகளை வெளியிட்டன. தே.லூர்து, தமிழவன், எம்.டி.முத்துக்குமாரசாமி, ராஜ்கௌதமன்,நாகார்ச்சுனன், பிரேம், ரவிக்குமார், ஜோசப் நோயல் இருதயராஜ், எஸ்.சண்முகம், க.பூரணச்சந்திரன் ஆகியோர் அமைப்பியல் நோக்கிலான இலக்கிய ஆய்வுக்கட்டுரைகளை எழுதிஉள்ளனர். திருப்பாவை ( மேலும்,1989), மெய்ப்பாட்டியல் உரை ( மேலும்,1989 ), புறநானூறு (மேலும்,1989), முதலியவை அமைப்பியல் நோக்கில் வெளியான கட்டுரைகளில் குறிப்பிடத்தக்கன. "அமைப்பியல், கட்டவிழ்ப்பு(Deconstruction) போன்ற நுணுக்கமான கருவிகள் இன்றி மேலோட்டமான பார்வையிலேயே செய்யத்தக்கவை இவை. இக்கட்டுரைகள் மிகச் சாதாரணமானவை... ஜீவா, ரகுநாதன், தி.க.சிவசங்கரன், கைலாசபதி, சிவத்தம்பி, ஞானி, கேசவன்

போன்ற மார்க்சியர்கள் இவற்றைக்காட்டிலும் வன்மையான குறுக்கீடுகளைத் தமிழ் இலக்கியத்தில் செய்துள்ளனர் " [86] என்று அமைப்பியல் ஆய்வுக்கட்டுரைகளை அ.மார்க்ஸ் மதிப்பிட்டுள்ளார்.

" அமைப்பியல் வாதம்.. ஏதாவதொரு வகையில் மார்க்சியத்தின் அடிப்படைகளை மறுக்கின்றது அல்லது கொச்சைப்படுத்துகின்றது " [87] என்றும் " அமைப்பியல், இயங்கியல் பார்வை அற்ற ஒரு முறை " [88] என்றும் கருதுகிற மார்க்சியர்களும் உளர். இவர்களுக்குப் பதிலுரையாக, " எல்லாக் கேள்விகளுக்கும் செவ்வியல் மார்க்சியத்திலேயே விடை இருக்கிறது. இலக்கியத்திறனாய்வுகட்கும் அரசியல் நடை முறைகட்கும் அமைப்பியல் போன்றவை எந்தப் பங்களிப்பையும் செய்துவிட முடியாது, பழைய அணுகல் முறைகளே நமக்குப்போதுமானது எனக்கருதிச் செயற்பட்டோமானால் உடனடி எதிர்காலத்தில் மார்க்சியம் புறக்கணிக்கப்படும் " [89] என்று முன்வைக்கப்படும் கூற்றும் கருதத்தக்கது ஆகும்.

அமைப்பியல், பின் அமைப்பியலாகவும் ( Post Structuralism ) நவீனத்துவம் (Modernism ) பின் நவீனத்துவமாகவும்( Post Modernism ) மேற்குலகில் வளர்ச்சி பெற்றதைப் போலவே தமிழ்ச் சூழலிலும் வளர்ச்சி பெற்றுள்ளன. தமிழில் 'பெண்ணியம்' என்றும் 'தலித்தியம்' என்றும் பேசப்படுகின்ற இன்றைய போக்குகள் இவற்றின் தொடர்பாகவே **ஏற்பட்டுள்ளன.**

அமைப்பியல் மார்க்சியர்களின் மீது கடுமையான விமர்சனங்கள் இருந்தபோதிலும், பிரதிக் கோட்பாடு, கட்டவிழ்ப்பு, குறியியல்(Semiology), வாசிப்பு முதலிய கோட்பாடுகளின் வழி, தமிழ் இலக்கியத் திறனாய்வில் சில புதிய ஆக்கங்களை இவர்கள் கொணர்ந்துள்ளனர் என்பது இவர்களின் திறனாய்வுகள் வழி புலனாகின்றது.

தொகுப்பும் ஆய்வும் :

18 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய நாடுகளில் தொழிலாளி,முதலாளி

வர்க்கங்களுக்கும் ஆளும் வர்க்கங்களுக்கும் இருந்த முரண்பாடு, தொழிற்புரட்சிக்குப் பின்னர் முதலாளி வர்க்கத்திற்கும் தொழிலாளி வர்க்கத்திற்குமான முரண்பாடாக மாறியது. இச் சூழலில் தான் மார்க்சியம் செர்மனியில் தோன்றியது.

செர்மானியத் தத்துவ அறிவு, பிரெஞ்சு சோசலிசக் கருத்துகள், ஆங்கிலேய அரசியல் பொருளாதாரம் ஆகியவை மார்க்சியத்திற்கு மூலங்கள்ஆகும்.

பாட்டாளி வர்க்கத்தின் தத்துவமாக உருவெடுத்த மார்க்சியம், பின்பு கலை இலக்கியத்துறையிலும் தன் செல்வாக்கைச் செலுத்தியது. 1950 முதல் தமிழிலும் மார்க்சிய நோக்கில் இலக்கிய ஆய்வுகள் வெளிவந்தன.

இயங்கியல், வரலாற்றியல் பொருள்முதல்வாதம், அரசியல் பொருளாதாரம், விஞ்ஞான சோசலிசம் மூன்றும் மார்க்சியத் தத்துவத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் ஆகும்.

தமிழில் 1950 முதல் 1996 வரை வெளிவந்துள்ள மார்க்சிய இலக்கிய ஆய்வுகளை, மரபு மார்க்சியம், அந்நியமாதல் மார்க்சியம்,அமைப்பியல் மார்க்சியம் என்னும் மூவகை நோக்கில் செய்யப்பட்டுள்ள ஆய்வுகளாக வகைப்படுத்தலாம்.

அடிக்கட்டுமானம், மேற்கட்டுமானம் ஆகிய இரண்டனுக்கும் உள்ள உறவை வரையறுப்பதில் மார்க்சியர்களுக்கிடையே முரண்பாடு உள்ளது. மரபு மார்க்சியர்கள், அடிக்கட்டுமானத்திற்கு முதன்மை அளித்துள்ளனர். அந்நியமாதல் மார்க்சியர், மேற்கட்டுமானத்திற்கு அழுத்தம் கொடுத்து ஆய்வுகளை நிகழ்த்தி உள்ளனர்.

கட்சி சார்ந்தும், கட்சி சாராமலும் மார்க்சிய ஆய்வுகள் வெளியாகியுள்ளன. பொதுவுடைமைக் கட்சிகளின் உட்பிரிவுகளின் நிலைப்பாடு - கருத்துக்குத்தக அவர்களின் ஆய்வு முடிவுகளும் அமைகின்றன.

மார்க்சியர்களின்இலக்கியக் கோட்பாடாக சோசலிசநடப்பியல்

விளங்குகிறது. ஸ்டாலினிய அரசியலுக்குச் சார்பானது இக் கோட்பாடு என்று அந்நியமாதல் மார்க்சியரும், அமைப்பியல் மார்க்சியரும் கருதுவர். விமர்சன நடப்பியலின்பரிணாம வளர்ச்சியே சோசலிச நடப்பியல் என்று, மரபு மார்க்சியர் கருதுகின்றனர்.

சோவியத் ஒன்றியம் சிதறுண்டு உடைந்துபோன பின்பு உலக அளவில் மார்க்சியத்தின் நிலை, கேள்விக் குறியாகியது. வர்க்க முரண்பாடுகள் பகை முரண்பாடுகளாகத் தொடரும் காலம் வரையிலும் மார்க்சியத்திற்கான தேவை இருந்தே தீரும். நகரத்திற்கும் கிராமத்திற்கும் உள்ள முரண்பாடும், உடல் உழைப்பிற்கும் மூளை உழைப்பிற்கும் உள்ள முரண்பாடும், தீர்வதைப்பொது-வுடைமை ( Communism ) என்று மார்க்சியர் கருதுகின்றனர். இதன் பகுதியாக ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் உள்ள முரண்பாடு, இனங்களுக்கு இடையில் உள்ள முரண்பாடு முதலியவற்றையும் இணைத்துக் காணமுடியும்.

இந்தியச் சூழலில் சாதிகளுக்கிடையிலான முரண்பாடு ஒழிவதையும் இங்குச் சேர்த்துக் கொள்ளலாம். இவ்வாறு மார்க்சியத்தின் தேவை குறித்துத் தமிழக மார்க்சியர் கருத்துக் கொண்டுள்ளனர். தலித்தியம், பெண்ணியம், சூழலியம், மற்றும் மனித உரிமைகள் பற்றியும் இன்று மார்க்சியர் கவனம் செலுத்தத் தொடங்கி உள்ளனர். இதற்கு ஏற்றவாறு மார்க்சியக் கோட்பாடுகள் விவரிக்கப்படுகின்றன.

* * *

## சான்றெண் விளக்கம்

1. A Dictionary of Scientific Communism, P.128.
2. குணா, மார்க்சிய இயங்கியல், ப.6.
3. குணா, மு.கு.நூ.,ப.6.
4. மார்க்சிய லெனினியத் தத்துவ ஞானத்தின் அடிப்படைகள், புத்தகம்-1, ப.29.
5. தியாகு, மார்க்சியம் - ஆனா ஆவன்னா, ப.24.
6. எஸ்.என்.நாகராசன், கம்யூனிசம் -விடுதலையின் இலக்கணம், ப.5.
7. எஸ்.என்.நாகராசன், மு.கு.நூ.,ப.6.
8. எஸ்.என்.நாகராசன், மு.கு.நூ., ப.5.
9. குணா, மார்க்சிய இயங்கியல், ப.1.
10. ஞானி, படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியம், ப.37.
11. வ.கீதா,'அல்தூ ஸரின் மார்க்சியம்', அல்தூ ஸர் : ஓர் அறிமுகம், ப.23.
12. தி.சு.நடராசன், திறனாய்வுக் கொள்கைகள், ப.145.
13. காரல் மார்க்ஸ், பிரெடெரிக் எங்கெல்ஸ், கம்யூனிஸ்ட் கட்சிஅறிக்கை, பக்.20,21.
14. எஸ்.இராமகிருஷ்ணன், மார்க்சியப் பொருளாதாரப் பார்வை,ப.23.
15. பரத் பதங்கர்,'வரலாற்றுப் பொருள்முதல்வாதம் பற்றிய புதிய சிந்தனை', மொ.பெ :சிங்கராயர், நிகழ்,டிசம்பர்,1990,ப.1.
16. முனைவர் ஏ.பி.மோகன்தம்பி, மார்க்சிய இலக்கியக் கொள்கை,ப.5.

17. மேற்கோள் : டாக்டர் அ.மாரியப்பன், சோசலிச யதார்த்த வாதம், ப.11.

18. செ.கணேசலிங்கன், ' கம்யூனிச சமுதாயம், ' குமரன், நவம்பர் 1989, ப.22.

19. எங்கெல்ஸ், மதத்தைப்பற்றி, ப.377.

20. ஏ.ஜே.கனகரட்னா, 'மார்க்சியமும் இலக்கியமும், ' மார்க்சியமும் இலக்கியமும் - சில நோக்குகள், ப.90.

21. மேற்கோள் : சிவராமன், ' ரைட் மில்ஸ் - ஓர் அறிமுகம், படிகள், செப்டம்பர், 1979, ப.8.

22. ரகுநாதன், நியுசெஞ்சுரி வாசகர் பேரவைக் கருத்தரங்கக் கட்டுரை, திருநெல்வேலி, செப்டம்பர் 29,30,1990, ப.16.

23. கலாநிதி சி.மௌனகுரு, சுபமங்களா, ஜூன், 1994.

24. சி.இ.மறைமலை, இலக்கியமும் மார்க்சியமும், ப.51.

25. மேற்கோள் : மருத முத்து, 'இந்திய வாழ்க்கையும் மார்க்சியமும் - விமர்சனம், ' சிகரம், ஜூலை, 1977.

26. மேற்கோள் : ஞானி, கடவுள் ஏன் இன்னும்சாகவில்லை?, ப.62.

27. மேற்கோள் : ஞானி, 'மதமும் மார்க்சியமும்', கலை இலக்கியப் பெருமன்றக்கருத்தரங்கு, திருப்பூர், 24.12.1994.(அ.வ.க.)

28. கோ.கேசவன், இலக்கியவிமர்சனம் - ஒரு மார்க்சியப் பார்வை, பக்.52,68.

29. வி.இ.லெனின், 'லியோ டால்ஸ்டாய் புரட்சியின் கண்ணாடி ' கலை இலக்கியம் பற்றி, பக்.25 - 31.

30. அசிஸ் லகரி, ' பிளவை இணைத்தல் - அரசியல், இலக்கியம் குறித்து ஓர் பார்வை', படிகள், பதின்மூன்று, 1982, ப.31.

31. மேற்கோள் : ஆவ்னர் சிஸ், மார்க்சீய அழகியலின் அடிப்படைகள், ப.79.

32. A Dictionary of Philosophy, P. 351.

33. மேற்கோள் : ரகுநாதன், ' மார்க்சி நமக்குப்போதிப்பது என்ன? ', மல்லிகை, ஏப்ரல், 1973.

34. கோ.கேசவன், 'மரபுகள் : தொடர்ச்சியும் தொடர்ச்சி இன்மையும், புதியன, செப்டம்பர், 1995, ப.13.

35. எஸ்.வி.ராஜதுரை, ரஷ்யப்புரட்சி : இலக்கிய சாட்சியம், ப.179.

36. பொன்னீலன், ஜீவா என்றொரு மானிடன், பக்.301,302.

37. மேற்கோள் : அருணன், மார்க்சிய அழகியல், ப.134.

38. மேற்கோள் : கே.பாலதண்டாயுதம், இலக்கியத்தில் மனித நேயம், பக்.111,112.

39. மேற்கோள் : சித்திரலேகா, 'ஈழத்து இலக்கியமும் இடதுசாரி அரசியலும் - சில குறிப்புகள்', சமர், ஜூலை, 1979.

40. நா.வானமாமலை, மார்க்சிய அழகியல், ப.93.

41. ரகுநாதன், தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றத்தின் கொள்கை அறிக்கை, சாந்தி, 1.8.1976,

42. டாக்டர்.சி.கனகசபாபதி, 'இலக்கியமும் நடப்பியலும்', மேலும், ஏப்ரல், 1989, பக்.46,47.

43. டாக்டர் அ.மாரியப்பன், சோசலிச யதார்த்தவாதம், ப.68.

44. மேற்கோள் : எஸ்.வி.ராஜதுரை, ரஷ்யப்புரட்சி : இலக்கிய சாட்சியம், ப.189.

45. அலன் ஸ்விஞ்வுட், 'அதிகாரி, ஆட்சி, சோசலிசம், இலக்கியம் ' மார்க்சியமும் இலக்கியமும் - சில நோக்குகள், ப.8.

46. ஞானி, படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியம், ப.49.

47. எஸ்.வி.ராஜதுரை, மு.கு.நூ., ப.256.

48. ஞானி, மு.கு.நூ., ப.45.

49. ஞானி, மார்க்சியமும் தமிழ் இலக்கியமும், ப.331.

50. ரகுநாதன், மு.கு.க., சாந்தி, 1.8.1976.

51. ரகுநாதன், 'சோசலிச எதார்த்தவாதம் - மறுபரிசீலனை தேவை தான்,' தாமரை, நவம்பர், 1991.

52. கோ.கேசவன், இலக்கிய விமர்சனம் - ஒரு மார்க்சியப் பார்வை, ப.205.

53. கோ.கேசவன், மு.கு.நூ., ப.207.

54. எம்.ஏ.நுஃமான், 'பதிவுகள்,' அலை, ஐப்பசி - கார்த்திகை 1981, ப.537.

55. ஞானி, ' சங்கம் நாவல் : விமர்சனம், 'கதிரவன், 1.8.1992.

56. ஆவ்னர் சிஸ், மார்க்சிய அழகியலின் அடிப்படைகள், ப.315.

57. ரகுநாதன், மு.கு.க., தாமரை, அக்டோபர், 1991.

58. ரகுநாதன், மு.கு.க., தாமரை, அக்டோபர், 1991.

59. ஞானி, மு.கு.க., கதிரவன், 1.8.92.

60. அருணன், மார்க்சிய அழகியல், ப.86.

61. யூரி சுஸ்மேன்கோ, சோவியத் இலக்கியம் - நேற்று இன்று நாளை, ப.105.

62. நா.சுப்பிரமணியன், ' தமிழ் ஆய்வியல் வரலாற்றில் கலாநிதி க.கைலாசபதி, இலக்கு, மார்கழி, 1996, ப.24.

63. தி.க.சிவசங்கரன் பேட்டி, தாமரை, ஜூன், 1994.

64. தமிழவன், அமைப்பியல் வாதமும் தமிழ் இலக்கியமும், ப.60

65. எஸ்.தோதாத்ரி, ஆய்வாளருக்கு எழுதிய கடிதம், நாள்: 5.10.1995.

66. முனைவர் செ.சு.பழனிசாமி, ஆய்வாளருக்கு எழுதிய கடிதம், நாள்: 3.12.1992.

67. தமிழவன், ஸ்ட்ரக்சுரலிசம், ப.15.

68. அ.மார்க்ஸ், உடைபடும் மௌனங்கள், பக்.96-119.

69. ஞானி, நிகழ், ஏப்ரல், 1983.

70. 'கலாநிதி க.கைலாசபதி', இலக்கிய வெளிவட்டம் - 19.

71. எம்.ஏ.நுஃமான், ' இலக்கிய விமர்சனம் - ஒரு மார்க்சியப்பார்வை சில குறிப்புகள், 'அன்னம் விடுதூது, மே -ஜூலை, 1985.

72. ஞானி, கல்லிகை, முன்னுரை, ப.vi.

73. எஸ்.என்.நாகராசன், மார்க்சியம் - கிழக்கும் மேற்கும்,ப.13.

74. மேற்கோள் : ஞானி, படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியம், ப.26.

75. ஞானி, மு.கு.நூ., ப.41.

76. மேற்கோள் : தமிழவன், மு.கு.நூ., ப.119.

77. மேற்கோள் : தமிழவன், மு.கு.நூ., ப.120.

78. அ.மார்க்ஸ், மார்க்சியமும் இலக்கியத்தில் நவீனத்துவமும்,ப.204.

79. ஞானி, படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியம், ப.175.

80. கோ.கேசவன், இலக்கிய விமர்சனம் - ஒரு மார்க்சியப் பார்வை, ப.207.

81. செந்தூரன், 'நமது இலக்குகள்', செந்தாரகை,அக்டோபர்,1984.

82. அறிவன், ஞானி, 'கோ.கேசவனின் இலக்கிய விமர்சனம் - ஒரு மார்க்சியப் பார்வை', நிகழ்,நவம்பர், 1984.

83. ஞானி, மு.கு.நூ., ப.119.

84. எம்.ஏ.நுஃமான், முன்னுரை, மார்க்சியமும் இலக்கியத் திறனாய்வும், பக்.9,10.

85. அ.மார்க்ஸ், மார்க்சியமும், இலக்கியத்தில் நவீனத்துவமும், பக்.91,92.

86. அ.மார்க்ஸ், மு.கு.நூ., ப.91.

87. அருணன், மார்க்சிய அழகியல், ப.136.

88. எஸ்.தோதாத்ரி, ஆய்வாளருக்கு எழுதிய கடிதம், நாள் : 5.10.1995.

89. அ.மார்க்ஸ், ' மார்க்சியம், அமைப்பியல், தமிழ்ச் சூழல் ', கல்குதிரை, டிசம்பர், 1989, ப.92.

* * *